புஸ்தகம்-22.] [சஞ்சிகை-9.
"The Children's Favourite, The Teachers' Help, And the Parents' Guide."

ஆனந்த௵ மார்கழி௴ } விவேக  சிந்தாமணி { December-January. 1914—15.

ESTABLISHED 1892

# THE WAR— "யுத்த காண்டம்" —NUMBER.

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியந் தாலிகழில் வந்ததென்னைஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## A HOUSE-HOLD NARRATIVE OF CONTENDING FOLKS IN THE GREAT WAR OF 1914.

"உன்னதமாம் பார'தப்போர் செய்வார் கதை."

### A SECRET PAGE OF HISTORY IN HUMAN AFFAIRS.

MR. ASQUITH'S APPEAL TO THE NATION AT LARGE.

இராஜ்யவித்தையி லோர் குப்தபாகம்.—(தொடர்ச்சி.)

### THE PITIFUL STORY OF BELGIUM.

**(As told by one of her own sons.)**

M. Maurice Maeterlinck, the Belgian Dramatist, and Philosopher said:—

It is a pitiful story I have to relate. It is the story of a little kingdom which has kept its pledge and died for it. (Cries of "Never.") Belgium was established as a buffer State against two great contending Powers to prevent the passage of one army into the territory of the other, and her neutrality was guaranteed by the greatest Power in Europe—England. We have kept our pledge loyally. In August Germany sent an ultimatum asking that we should let their forces go through into French territory. It is untrue that if the request had come from France, Belgium would have been more lenient. She would in the same way have endeavoured to prevent the French Army from breaking the terms of neutrality. Belgium has been called England's foster child, and England has certainly proved herself a good foster mother. My countrymen realize that England's word is her bond. (Cheers.)—Speech at *Lord Haldane's Meeting on October 10th at Newcastle-Upon-Tyne.*

### பெல்ஜியத்தின் பரிதாபக் கதை.

பெல்ஜியம் தேசத்தவரும் பிரகிருதி வித்தையில்தேர்ந்த மஹாவித்துவானும் நாடக கிரந்தங்களியற்றிப் பேர்பெற்றவரும், உண்மையான தத்துவசாஸ்திரியுமாகிய எம். மாரிஸ் மேடர்லின்க் அவர்கள் "யியூகாஸில்-அபான்-டைன்" என்னும் பட்டணத்தில் லார்ட் ஹால்டேன் சைனியத்துக்கு ஆள் சேர்ப்பதற்காகச் செய்த பிரசங்கங்களைக் கேட்பதற்காகக்கூடிய மீட்டிங்குமுன் பெல்ஜியத்தின் பரிதாபக்கதையை வெகு சுருக்கமாகவும் உருக்கமாகவும் சொன்னார். அவர் யுத்தப்பாழில் தம் வீடு, வாசல், நாடு, நகரம் எல்லாம் துறந்து இங்கிலாந்தில் அடைக்கலம் புகுந்துள்ள லக்ஷக் கணக்கானபேர்களில் ஒருவர்.

"நான் உங்களுக்குச் சொல்லவிருக்கும்கதை வெகு பரிதாபமானது. ஒரு சின்னராஜ்யம் தன் செய்கடனைச் செய்யவென்று தலைகொடுத்துத் தலைசாய்ந்த கதையிது. (இல்லை, இல்லை, தலை சாயவில்லை)." ஆட்டுக்கடா சண்டையிலே மாட்டிக்கொண்டே நசுங்கிவிட்டோம் என்று

சொன்னாற்போல் அவர் தம்தேசத்தின் பரிதாபக்கதையை அரிதாகச்சொல்லி இரங்கலுற்றார். சண்டைக்குத் தயாராய் எதிர்த்துநிற்கும் இரண்டு பெரிய இராஜ்யங்களுக்கு நடுவே அவர்கள் முட்டிக்கொண்டு மண்டையுடையாதபடி இடையிலே மெத்தை கட்டினாற்போல் பெல்ஜியத்தை ஒருகக்ஷியிலும் சேராமல் தனியரசாகவிருக்க நியமித்தார்கள். ஜெர்மனி, ப்ரான்ஸின் சைனியங்கள் ஒரு தேசத்திலிருந்து மறுதேசத்துக்குப்போக வழியில்லாதிருக்கும்படி பெல்ஜியம் ஸ்வதந்திர நாடாக ஏற்படுத்தப்பெற்றது. அதன் ஸ்வதந்திரத்துக்குக் கேடுவராதென்று ஜெர்மனி, ப்ரான்ஸ் மட்டுமல்ல, ஐரோப்பாவில் அதிமேலாகவிளங்கிய இங்கிலாந்தினாலும் உறுதி கூறப்பட்டது.

"நாங்கள் செய்கடனைச் செய்துவிட்டோம். அதனால் தலை போகிறதானாலும் செய்தே தீருவோம் என்று ஜெர்மனியின் சைனியம் பெல்ஜியத்தில் நுழையக்கூடாதென்று தடுத்தோம். ஆகஸ்டு மாசத்தில் ஜெர்மனியார் தம் சைனியம்போக வழிவிட வேண்டுமென்று கேட்டார்கள். கூடாதென்று சொன்னோம். அப்படியே ப்ரான்ஸ் கேட்டிருந்தால்* அதற்கும் அதே பதில்தான். அத்துமீறி ஸத்தியங்கெட்டு முரட்டுத்தனமாய் ஜெர்மானியர் கொள்ளைக்காரனைப்போல் கூட்டங் கூடிக்கொண்டு அக்ரமச் சண்டைக்கு வந்தார்கள். வந்தவர்களை பலமுள்ளமட்டும் எதிர்த்து நின்று மடக்கியடித்தோம். சுரணைகெட்டு அவர்கள் மரணம் விளைக்கச் சண்டைசெய்து நாடுநகரங்களையழித்துப் பாழாக்கிவிட்டார்கள். பெல்ஜியம் இங்கிலாந்து வளர்த்த குழந்தையென்று சொல்கிறார்கள். அது உண்மையே. இங்கிலாந்து நல்ல வளர்ப்புத்தாயாக வந்து வாய்த்தாள். ஆங்கிலர் வாக்குத் தவறாதவர்களென்று எங்கள் தேசத்தார் நம்பியிருக்கிறார்கள். அவர்கள் நம்பிக்கை வீண் போகவில்லை." "இங்கிலாந்தின் வாய்வார்த்தையே கைப்பத்திரம்." வாக்குறுதி வீண்போகாதிருக்க நாக்குறுதி வேண்டும். நாக்குறுதியுண்டானால் கைக்கு பலம் தானேவரும். "அல்லனபோல் ஆவனவும் உண்டு சில."

## பெல்ஜியம் தன் பரிதாப நிலையையுன்னி இரங்கல் கண்ணி.

(*After M. Maurice Maeterlinck.*)

1. செய்கடனைச் செய்ய வென்றே
தலைகொடுத் தோம் இலையோ கதி !
2. ஆட்டுக் கடாச் சண்டை யிலே
மாட்டிக் கொண்டே நசுங்கிப் போனோம்!
3. நாடுநகர் வளமிருக்க நலமெல்லாம் சேர்ந்திருக்கக்
கூடுவிட்டுக் கூடுபாயும் கூத்தாடிபோ லானோமே!
4. கேடுகெட்ட மானிடர்கள் கூடுகட்டி வாழவென்று
மாடுபிடிக் கள்ளரைப்போல் நாடுநகர் பிடித்தாரம்மா !
5. ஆங்கிலர்சொல் தவறாரென்று அவர்கையைப் பார்த்திருந்தோம்
எங்கள்கதி இவ்விதமா யாகுமென்று நினைத்தோமில்லை.
6. ஆளுக்காள் எதிர்நின்று சண்டைசெய்வ துலகதர்மம்,
அசுரர்களைப் போலேயம்மா அநியாய யுத்தம்செய்தார்.
7. நாடுநகர் எல்லாமொரு கொடியில்பொடி யாக்குவிக்கும்
கோடியானை பலமுள்ள கொடியஜட யந்திரம்செய்தார்.

8. அரக்கர்போல் அவ்வியந்திரம் முடுக்கிவிட்ட பாதகர்கள்
இரக்கமில்லார் பரக்கக்குடியைப் பதறவிட்டார் பாரம்மா !

9. தர்மந்தலை யெடுக்கவென்றே தனஞ்சயனைப் போலேயெங்கள்
அரசசிங்கம் ஆல்பர்ட்அம்மா ! அற்புதப்போர் செய்கிறார்பார் !

10. தர்மமில்லை வர்மமில்லை கைப்பலமே பலமென்றானே !
தர்மவர்ம மில்லாச்சண்டை அதர்மந்தானே யாகாதோ !

11. "தர்மந்தலை தாழவேதான் அதர்மந்தலை யெடுத்தபோது
தர்மந்நிலை நாட்டவென்றே நானும்வந்து அவதரிப்பேன்."—

12. என்று சொன்னார் வாக்குப்பொய்யோ, இல்லாவிட்டால்,
எங்கள் கர்மம் இப்படியோ தெரியவில்லை.

13. ஸநாதநமாம் தர்மமென்றும் பொய்க்காது ஸத்தியமிது:
அநாதரவா யெங்களையும் விட்டுவிடார் ஈசன்தானும்.

14. நல்லோர்நலம் இழந்தாற்றான் பொல்லார்கொட்டம் அடங்குங்காண்:
எல்லோரும் இதையறிய ஸர்வேசன் விதிவகுத்தார்.

15. அந்தவிதி தவறாமல் அநர்த்தம்வந்த தெங்களுக்கு:
சொந்தவிதி தவறில்லை எங்கள்மனச் சாக்ஷியாணை.

16. மனச்சாக்ஷி யொப்பநாங்கள் மாநிலத்தில் நடந்துகொண்டோம்
அஹம்பாவம் தலைக்கேறி அதர்மஞ்செய்தார் அழிவதெப்போ ?



## HOW GREAT BRITAIN WAS DRAWN INTO TNE GREAT WAR OF 1914.

"The sequence of events illustrate the interdependence of all Great Powers in their relations. Austria threatens Servia ; Russia backs Servia: Germany opposes Russia : France backs Russia : Germany and France being opposed, Belgium is in the way; Belgium is attacked, and we are obliged to defend Belgium and to help France and Russia in order to protect ourselves."

### இந்தப் பாரதப்போரில் ஆங்கிலேயர் புகவாய்ந்த தெப்படி ?

"மழைவிட்டும் தூவானம் விடவில்லை."

1912-13-ம் வருஷத்தில் பால்கன் நாடுகள் (Balkan States) துருக்கியோடு யுத்தம் செய்ய நேர்ந்தபோது ஐரோப்பாவிலுள்ள பெரிய இராஜ்யங்கள் அதில் புகுந்துகொள்ளாமல் தானே அது ஒருவிதமாய் முடிந்தது. "மழைவிட்டும் தூவானம் விடவில்லை" யென்கிற பழமொழியாக அந்தச் சண்டை யொழிந்தும் யுத்தகாரணமான மனவெரிச்சல் நீங்கவில்லை. ஸ்லாவ்ஸுக்கும் டியூடன்ஸுக்கும் எட்டாமிடத்துப் பொருத்தம் என்று "சண்டைக்காரர்கள் பூர்வோத்தரத்தை" விசாரித்தெழுதிய விடத்தில் காட்டியிருக்கிறோம். இது ஜாதிப்பகையென்று சொன்னாலும், உண்மையில் ஜாதிவேற்றுமையினால் உண்டானதில்லை. தேவாசுரர்கள் சண்டை மாதிரி இது ஸ்வபாவமாக ஏற்பட்டது. ஏனெனில் அவர்களிருவர்களுடைய லக்ஷியங்களும் ஒன்றுக்கொன்று மாறுபட்டு ஒவ்வாததாக விருக்கிற காரணத்தினால் விரோதம் எப்படியும் எப்போதும் சம்பவிக்கக் கூடியதே. இதிஹாஸமாக இங்கே யொரு கதை சொல்கிறேன்:

இந்திரன்—விரோசனன் கதை.

ஆதியிலே பிரம்மாவினுடைய புத்திரராகிய பிராஜபதிக்கு இரண்டு புத்திரர்களிருந்தார்கள்.

அவர்கள் பேர் இந்திரன், விரோசனன். இவர்களிருவரும் மஹாபலிஷ்டர்கள். மிகவும் புத்திசாலிகள். ஒருநாள் இருவரும்கூடி சரஸஸல்லாபமாகப் பேசிக்கொண்டிருக்கையில் "ஆத்மலாபமே ஜன்மஸாபல்யம்" என்று சொல்லியிருக்கிறதே அதன் அர்த்தம் என்னவென்பதைப்பற்றி விவாதம்நேர்ந்தது. "தேஹமெடுத்ததற்குப் பலன் ஆத்மஞானம் பெறுவதே" யென்பது அதற்கு வாச்சியார்த்தம். இங்கே ஆத்மாவென்றால் என்னவென்கிற கேள்வி பிறந்தது. ஏனெனில் ஜன்மமெடுத்ததற்குப் பலனைப் பெறவேண்டுமென்றால் ஆத்மாவை யறியவேண்டும். ஆத்மாவையறிய அதில் லக்ஷியம் வைக்கவேண்டும். ஆகையால் ஆத்மா இன்னதென்று தெரிந்துகொண்டால் அதை அடையவழி தேடலாம். இந்த சந்தேகம் அவர்களுக்குள் தீராமையால் இருவரும் பிதாவாகிய பிரஜாபதியுலகம் சென்று அங்கே யவரிடத்துச் சிஷ்யர்களாயிருந்து ஆத்மா என்றால் இன்னதென்று அறிந்துகொண்டுவரப் போனார்கள். பிராஜபதி ராஜா இவர்களுடைய மனக்கருத்தையறிந்து இவர்களுக்குண்மையுபதேசம் செய்யப் பக்குவம் போதாதென்று அவர்கள் கேட்ட கேள்விக்கு மட்டும் பதிலுரைத்தார்.

"கங்காளத்தில் பார்."

"ஆத்மாவென்றால் என்ன ? அதைக் காண்கிற விதம் எப்படி ?" என்று கேட்டதற்கு, "அப்பா, கங்காளத்தில் ஜலத்தை நிரப்பி அது அசையாமல் தெளிந்திருக்கையில், கங்காளத்தைப்பார்: தெரிந்துகொள்ளலாம்" என்றார்.

இருவரும் அப்படியே செய்தார்கள். விரோசனன் தன் தேஹம் அதில் பிரதிபிம்பித்து விளங்க "தேஹமே ஆத்மா" வென்று தீர்மானித்துக்கொண்டு "ஸ்வாமி! தெரிந்துகொண்டேன், வந்தனம்" என்று குருதக்ஷிணை சமர்ப்பித்து வீட்டுக்குப்போக விடை பெற்றுக்கொண்டு வந்துவிட்டான்.

இந்திரனுக்கும் அப்படியே தோன்றினும் அவன் விவேகபுத்தியால் விசாரித்தபொழுது ஆத்மா "அழியாதது" "ஆனந்தரூபம்" என்று சொல்லியிருக்கிறதே. தேஹம் அழியுந்தன்மையுடைய தாயிற்றே. பிணி, மூப்பு, மரணத்துக் காளாகி துக்கஸாஹரத்தில் கிடந்து அலைகளால் மொத்துண்டு தடுமாறும் கட்டையொத்த இந்த ஜடதேஹம் எப்படி ஆத்மாவாகும்? என்று சந்தேகம் தோன்ற, அதைச் சொல்லி விண்ணப்பித்துக்கொண்டான்.

பிரஜாபதி அவனை 30-வருஷமிருந்து குருகுலவாஸம் செய்தால் அந்த சந்தேகம் தீரபதில் சொல்வதாகச் சொன்னார். அப்படியேயிருந்து தேஹம் ஆத்மாவல்ல வென்று கண்டபின் ஆத்மாவைக் காட்டவேண்டுமென்று விண்ணப்பித்துக்கொண்டான்.

"கண்ணாடியிற் பார்"

என்றுசொல்ல, கண்ணாடியிற் சென்று பார்த்து அதன் ஸ்படிகத் தன்மையை யுணர்ந்து அதற்குச் சரியான "சுத்தமனஸ்" ஆத்மா வென்று கருதி அதிலும் சந்தேகம் தோன்ற, பின்னும் 30-வருஷமிருந்து அந்தச் சந்தேகத்தை நிவிருத்தித்துக்கொண்டான்.

இப்படியாக 101-வருஷம் குருகுலவாஸம் செய்து பிராணனே ஆத்மாவென்று நிச்சயித்து வந்தான்.

"தேஹமே ஆத்மா."

Philosophy of Brute Force.

விரோசனன் தேஹமே ஆத்மாவென்றுணர்ந்து தேஹத்தில் லக்ஷியம் வைத்து 'அவ்யக்தம்' வரையிலுள்ள எல்லாவற்றையு முணர்ந்து பிரகிருதியெல்லாம் தன் வசமாகச் செய்துகொண்டவனானான். இதை அவன் தன் பரிவாரங்களுக்குப் போதித்து பிரகிருதிவித்தையில் மிகவும் தேறினவனானான்.

"பிராணனே ஆத்மா."

Philosophy of Spiritual Force.

இந்திரன் பிராணனே யாத்மாவென்றுணர்ந்து பிராணனில் லக்ஷியம் வைத்து வச்சிராயுத

தானாய் தேஜோமீனஸ் வரையில் எல்லாம் தன் கைவசமாக, ஆஸ்திக புத்திமாறி அஹம் பாவம் முதிர்ந்து நானே தெய்வமென்று அகங் கரித்து இந்த தைஜஸாகங்காரம் எல்லாருக்கும் பற்ற அவனுடைய பரிவாரங்களை அந்த 'தைவிக' வித்தைபயிலத் தேற்றிவந்தான்.

"தேவர்கள் கர்வபங்கம்"

பகவான் தேவர்களுடைய கர்வத்தை யடக்கத் திருவருள் சுரந்து தாணுரூபம் கொண்டு அடிமுடியில்லாத திவ்ய தேஜோமயாநந்தப் பிழம்பாக தரிசனமளிக்க இந்திரன்' முதலான தேவர்கள் அதையுணரமாட்டாமல் தவித்துப் பின்னர் தேவி திருவருளால் திரிபுர ஸம்ஹாரமான பின் தேவி உணர்த்த உணர்ந்து இந்திரன் கர்வமொழிந்து தேவர்களுக்கு அரசனானான்.

விரோசனன் அசுரர்களுக்கரசனானான்.

இவர்களிருவருக்கும் ஸதா சண்டை. ஏன்?

லக்ஷியபேதம் கக்ஷியை யுண்டுபண்ணும்.

சகோதரர்களாயிருந்தும் ஒரு குருவினிடத்திற் சிக்ஷைபெற்றும் லக்ஷியம் வேறானபடியால் ஸதா தேவாஸுர யுத்தம் நடந்துகொண்டே தானிருந்தது. ஒருக்கால் தேவர்கள் ஜயிப்பார்கள். தோற்றுப்போன அசுரர்கள் தோல்வியின் காரணத்தையறிந்து அதை நீக்கிக்கொண்டு மறுபடியும் சண்டைக்கு வருவார்கள். சண்டைபோட்டு ஜயிக்கவும் ஜயிப்பார்கள். தோற்றுப்போன தேவர்கள் முறையிட்டுக்கொண்டுபோய் கடவுளிடம் வரப்பிரஸாதம் பெற்றுப் பின்னும் சண்டைக்கு வருவார்கள். இப்படியாக இவர்களுடைய சண்டை நடந்துகொண்டே யிருக்கும்.

"பட்டாக்கத்தியும் கலப்பைக்கோழுவும்."

The Sword vs. The Ploughshare.

பூர்வந் தொட்டு ஸ்லாவஸ் என்கிற சாந்த சுபாவமுடைய "உழுதுண்டுவாழும்" ஜாதியாருக்கும், டியூடன்ஸ் என்கிற முரட்டுசுபாவமுள்ள சண்டை சச்சரவுகள்போட்டுத் தேறிப் பிழைக்கும் "யுத்தவீரர்களான" ஜாதியாருக்கும் எப்போதும் சண்டைதான்.

இது கால, தேச, வர்த்தமான சந்தர்ப்பங்களுக்கேற்பப் பலவிதமாகத் தோற்றினாலும், சண்டை யென்னவோ நித்தியமாயுள்ளதுதான். இரும்பு ஒன்றானாலும் பட்டாக்கத்திக்கும் கலப்பைக்கொழுவுக்கும் விரோதம் தான்.

"யத்பாவம் தத்பவதி"

லக்ஷியம் வேறுபட்டால் எல்லாம் வேறுபடும். "என்னுடைய ரம்பைக்கு ஒற்றைக்கண் குருடு" என்று சொன்னவன் கதையாக அவரவர்கள் அந்தரங்கத்தில் எதைக் குறியாக வைத்துப் பூஜிக்கிறார்களோ, அந்த பயமாகிறார்கள். இது என்றும் மாறாத மனோதத்துவம். "யத்பாவம் தத்பவதி"— மனிதன் யாதொன்றை இடைவிடாது அல்லும் பகலும் கனவிலும் நனவிலும் நினைக்கிறானோ அவனுக்கு அது "அதுவாகும்" பலன் வித்திக்கிறது.

கர்மதர்மம்.

சண்டையின்மேல் லக்ஷியமுள்ளவனுக்கு சண்டைவந்துகொண்டே யிருக்கும். சாந்தத்தின்மேல் லக்ஷியமுள்ளவனுக்குச் சாந்தம் எப்படியும் வித்திக்கும். அவனைச் சண்டைக்கிழுத்தாலும் தன் சாந்தநிலை குலையாமல்தானே ஸ்ரீராமகிருஷ்ணமூர்த்திகளைப்போல் நிஷ்காமியனாய்ச் சண்டைபோடுவான்.

'பால்கன்' யுத்தத்தின் பிற்பலன்

Aftermath of the Balkan War.

இது உலக ஸ்வபாவமாக, 1912-ம் வருஷம் நேர்ந்த பால்கன் யுத்தம் ஓய்ந்தும், யுத்த ஸந்நத்தம் நிற்கவில்லை.

ஆஸ்திரியாவில் டியூடன் ஜாதியாருடைய செல்வாக்கு மிகுதி. ஜெர்மனியிலும் ப்ரஷ்யா வைத்ததே தான் சட்டம். இவ்விரு தேசத்தார்களும் நேசக்கட்டுப்பாட்டுக்குள்பட்டவர்கள்.

அப்படியிருக்க ருஷியா ஸ்லாவ்ஸ் இராஜ்ஜியமாதலால், அவர்கள் ஸ்லாவ்ஸ் நாடுகளுக்குத்

துணைசெய்யக் கட்டுப்பட்டவர்களாயிருக்கிறார்கள். இப்பொழுது இந்தச் சண்டையாரம்பமான விதத்தைச் சொல்லுவோம்:—

"ஸிராஜிவோ கொலை ஸம்பவம்"

The "Serajevo tragedy"

(1) ஸிராஜிவோவில் ஆஸ்திரியா-ஹங்கேரி சக்ரவர்த்தியின் இளவரசரும் அவருடைய பத்னியாரும் 1914ஆ ஜூன்மீ 28உ ஒரு மாணவன் கையால்கொலையுண்டுமாண்டார்கள்.

ஸிராஜிவோ (Serajevo) என்பது 1909-ல் ஆஸ்திரியாகட்டிக்கொண்ட 'போஸ்னியா' நாட்டில் அதேபேருடைய ஒரு மாஹாணத்தின் தலைநகர். அந்த மாகாணம் ஆஸ்திரியாவினால் ஜயித்துச் சேர்த்துக்கொள்ளப்பட்டதாயிருந்தும் அங்கேயுள்ள குடிகள் ஜாதியிலும் மதத்திலும் மனப்போக்கிலும் ஸேர்வியாவிலுள்ள ஜனங்களை யொத்தவர்கள். அதாவது இருவரும் ஸ்லாவ் ஜாதியைச்சேர்ந்தவர்கள். போஸ்னியா (Bosnia) ஸெர்வியாவுக்குப் பக்கத்திலுள்ள நாடு. அதிலும் 'ஸிராஜிவோ' (ஆஸ்திரியா-ஹங்கேரிபடம் பார்க்க) எல்லைப்புறத்திலிருக்கிறது.

கஹுர்நாமா.

The Ultimatum.

(2) ஜுலை 23உயில் ஆஸ்திரியா கவர்ன்மெண்டார் ஸெர்வியா கவர்ன்மெண்டுக்கு ஒரு கஹுர்நாமா எழுதி அதற்கு 48-மணி நேரத்துக்குள் சரியான பதில் அனுப்பவேண்டுமென்றும் இல்லாவிட்டால் சண்டை தொடுப்போமென்றும் எழுதியிருந்தார்கள். அதில் ஸெர்வியா கவர்ன்மெண்டார் ஆஸ்திரியா ராஜாங்கத்துக்குள்பட்ட விடங்களில் கலகம் உண்டு பண்ணுவதையும் ஸிராஜிவோவில் நடந்த கொலைக்கு அவர்கள் உடந்தையாக வில்லாவிட்டாலும் அக்கொலைபாதகம் செய்தவர்களை அவர்கள் தண்டனைக்குள்ளாகாதபடி காத்துவருகிறதாகவும் குற்றஞ்சாட்டி அவர்களுடைய ஸ்வதந்தரத்துக்கு ஒவ்வாத சில நிபந்தனைகளை அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டார்கள்.

"ருஷியா பரிந்துகொண்டு வரல்."

(3) ஜுலைமீ 24உ ருஷியா கவர்ன்மெண்டார் ஆஸ்திரியா ஸெர்வியாவைத் தாக்கினால் அது அத்தேசத்து மூலமாய் ருஷியாவைத் தாக்கினதாகக் கருதப்படுமென்றும், ஸெர்வியா ராஜ்யத்தின் ஸ்வதந்தரத்துக்கு இம்மியும் கேடுவராதபடி காப்பது அதன் கடமையாக விருக்கிறதென்றும் தெரிவித்தார்கள். ஸெர்வியாவை அடக்கிவிட்டால் பால்கன்ஸ் நாட்டில் (Balkans) ஆஸ்திரியாவின் செல்வாக்குப் பெரிதாய்விடுமென்றும் அதற்கு ருஷியா ஒருக்காலும் சம்மதிக்க முடியாதென்றும் ஸ்பஷ்டமாய் விளங்கத் தெரிவித்தார்கள்.

"வால்போச்சு கத்திவந்தது டம்டம்"

(4) அதே தினத்தில் (ஜுலைமீ 26-ல்) ரோமாபுரியிலுள்ள பிரிடிஷ்தூதர் ஆஸ்திரியா 'ஸலோனிகா' ரெயில்வேயைப் பிடித்துக்கொள்ளத் தயாராயிருக்கிறதாகத் தெரிவித்தார். இந்த ரெயில்வே மார்க்கமாய் ஆஸ்திரியா, ஜெர்மெனியிலிருந்து ஸெர்வியா மூலமாக (Ægean Sea) இஜியன் கடலுக்குப் போக வழியேற்படுவதாயிருப்பதால் இதைப்பிடித்துக்கொள்ள வேண்டுமென்று ஜெர்மனிக்கு வெகு நாளாய் அதன்மேல் நோக்கமிருந்து வந்தது. "வால்போச்சு கத்திவந்தது டம்டம்" என்ற குரங்கின் கதையாக இப்பொழுது ஸிராஜிவோவில் அகஸ்மாத்தாக நடந்த குற்றத்தை ஸேர்வியா தலையில் போட்டுவிட்டு அது சாக்காக அந்த ரயில் மார்க்கத்தை வசப்படுத்திக்கொள்ள எண்ணினார்கள்.

"எல்லாம் சரி! எட்டிநின்று பேசு!"

ஜுலைமீ 25-தேதியில் ஸேர்வியா கவர்ன்மெண்டார் ஆஸ்திரியா கவர்மெண்டாருடைய 'கஹுர்நாமா'வுக்கு பதில்எழுதினார்கள். அதிலே அவர்கள் குறிப்பிட்டிருந்த 10-அம்சங்களில் அவர்களுடைய ஸ்வதந்தரத்துக்கு ஒவ்வாததான இரண்டம்சங்களைத் தவிர மற்றவைக்

கெல்லாம் சரியான ஜவாபு சொல்லியிருந்தார்கள். அந்த இரண்டு அம்சத்திலும்கூட அவர்களுடைய ராஜ்யாதிகாரத்தின் ஸ்வதந்தரத்துக்குக் குறைவுவராதபடி ஆஸ்திரியாவுக்கு வேண்டிய உதவி செய்வதாக எழுதியிருந்தார்கள். "எல்லாம்சரி! எட்டி நின்று பேசு!" என்கிற கதையாக அவர்கள் பதில் அனுப்பியிருந்தார்கள்.

"சண்டைக்காரனுக்கு சறுக்கிவிழுந்தது குற்றம்"

ஜூலை மாஸம் 26-ந்தேதியில் நார்வேக்குப் பக்கத்தில் ரஜாவெடுத்துக்கொண்டு கடல்யாத்திரை செய்துகொண்டிருந்த ஜெர்மன் சக்ரவர்த்தி திடீரென்று பெர்லினுக்குத் திரும்பி வந்து இந்த வியவகாரங்களை யெடுத்து தானே மேற் போட்டுக் கொண்டவரானார். அவர் ருஷியாதலையில் பழிபோட்டு அவர்கள் சைன்யங்களைக் கூட்டி யுத்தத்துக்கு முஸ்தீபு செய்ததால் தானும் யுத்தம் தொடுக்க வேண்டியதாயிற்றென்று சொன்னார். ஆனால் இது உண்மையில்லை. ஏனெனில் ஜூலைமாசம் 26-ம் தேதி ஆஸ்திரியாவின் தலைநகராகிய வியன்னாவிலுள்ள ஜெர்மனியின் தூதர் ஆஸ்திரியா, ஸெர்வியாவுக்குப் புத்திவர எச்சரித்து விட்டு நின்று விடலாமென்றும், ஆதலால் ருஷியர் தலையிட்டுக்கொள்ள நிமித்தமிரா தென்றும் சொன்னார். (பார்லிமெண்டு சபையில் பிரசுரிக்கப்பட்ட பத்திரங்களில் (White Paper No. 32.) 32-வது பத்திரம் இதற்கு ஆதாரம். "சண்டைக்காரனுக்கு சறுக்கி விழுந்தது குற்றம்" என்கிறபடி சண்டைபோடத் தயாரானால் சண்டைக்குச் சாக்குத் தானா அகப்படாது?

சண்டைக்கிழுத்தாலும் ஸாஹஸம் வேண்டும்!

ஜூலை மாஸம் 27ந்-தேதியிலும் ஜெர்மனியின் மந்திரி (ஸ்டேட் செக்ரிடேரி) சண்டைக்கு ஆஸ்பதம் இராதென்றும் ருஷியா சண்டைக்கு வர நிமித்தமிராதென்றும் அவர்கள் சைனியமுஸ்தீபு செய்வது உஷாருக்காக மட்டும் கவனிக்கப்படத்தக்க தென்றும் சொன்னார். (White Paper No. 43.) சண்டைக்கிழுத்தாலும் ஸாஹஸம் வேண்டுமென்பது உண்மையாயிருந்தது.

"சண்டைக்காரனிடம் ஸமாதானம்பலிக்காது."

ஸெர்வியா அனுப்பிய பதிலில் ஸிராஜிவோவில் நடந்த குற்றத்தில் சம்பந்தப்பட்டவர்களாக குற்றஞ்சாட்டப்பட்டவர்களை விசாரிக்க ஒரு கமிஷன் நியமிக்கப்படுமென்றும் அதில் ஆஸ்திரியாவின் உத்யோகஸ்தர்கள் சேர்ந்திருப்பது ஸெர்வியாவின் ஸ்வதந்தரத்துக்கு ஊனம் வருமென்றும் (International Law) ஸ்வாதீன இராஜங்கத்தார்கள் அனுசரிக்கும் பொது தர்மப்படி கமிஷன் ஏற்பட்டு விசாரணை நடக்குமென்றும் அதன்முன் குற்றவாளிகளென்று ஏற்பட்டவர்களை சட்டப்படி விசாரித்துத் தண்டிப்பதாகவும் சொல்லியிருந்தார்கள். இது திருப்திகரமாயில்லை யென்று உடனே (ஜூலை மாஸம் 25-ந்தேதி யன்றைக்கே) ஆஸ்திரியா ஸெர்வியாவிலுள்ள தங்கள் தூதரை அத்தேசத்தை விட்டு வந்துவிடும்படி உத்தரவு செய்தார்கள் ஜெர்மனியின் முதல் மந்திரியாகிய 'இம்பீரியல் சான்ஸெலர்' ஆஸ்திரியா ஸெர்வியாவுக்கு அனுப்பிய கருர்நாமா முற்றும் ஒழுங்கானதாயில்லையென்று ஒப்புக்கொண்டார் (White Paper No. 18). அஃதோடு அவர் அன்றையதினம்(25ந்-தேதி) பிரிட்டிஷ் தூதர் (Sir E. Goschen) ஸர். இ. கோஷனோடு பேசுகையில் ஆஸ்திரியா 'ஸெர்வியாவை' இராணுவசிக்ஷை செய்யப்போகிறதாக ஒப்புக்கொண்டார். ஆனால் ஆஸ்திரியா அனுப்பிய கருர்நாமாவின் உள்ளடக்கம் தனக்குத் தெரியாதென்று சொன்னார். ஆனால் வியன்னாவிலுள்ள ஜெர்மனிதூதர் ஆஸ்திரியா அனுப்பிய கருர்நாமாவின் அடக்கம் இன்னதென்று தெரியுமென்றும் அதை அவர் தானே; ஸெர்வியாவுக்கு அது அனுப்பப்படுமுன் ஜெர்மன் சக்ரவர்த்திக்கு தந்தி மூலமாயனுப்பியதாகவும் ஒப்புக்கொண்டாரென்று வியன்னாவிலுள்ள பிரிடிஷ் தூதர் (Sir M. de Bunsen) ஸர் எம்,

டி. பன்ஸன் ஜுலை மாஸம் 30-ந் தேதியில் லண்டனுக்குத் தந்தி யனுப்பியிருக்கிறார். (WhitePaper No 95). "சண்டைக்காரனிடம் ஸமாதானம் பலிக்காது" என்பது வாஸ்தவமாயிற்று.

போர்த்தீ மூட்டல்.

Beginning of the Conflagration.

ஜுலை மாஸம் 28-ந்தேதி ஆஸ்திரியா ஸெர்வியாவோடு சண்டை தொடுக்கலாயிற்று. இடையில் பிரிட்டனும் இத்தலியும், ருஷியாவும்கூட இராஜதந்திர சம்பாஷணையினால் சண்டை யுண்டாகாதபடி தடுக்கப் பார்த்தார்கள். ஜுலை மாஸம் 27-ந்தேதியன்று பெர்லினிலுள்ள பிரிடிஷ்தூதர் ஜெர்மனியின் அந்நிய தேசகாரிய மந்திரியோடு பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது பிரிடிஷ் அந்யதேச காரிய மந்திரியாகிய ஸர் எட்வர்ட்க்ரே (Sir E. Grey) அவர்கள் சொல்லிய பிரேரேபணையை ஏற்றுக்கொள்ளவில்லை. பிரிட்டன், இத்தலி, ப்ரான்ஸ், ஜெர்மனி இந்த நான்கு ராஜாங்கத்தாரும் சேர்ந்து ஆஸ்திரியாவுக்கும் ஸெர்வியாவுக்குமுள்ள வித்யாஸத்தை சண்டைசச்சரவுக்கிடமில்லாமல் மத்யஸ்தமாயிருந்து தீர்த்துவிடலாமென்றார். இதற்கு ஜெர்மனியின் அந்யமந்திரி சம்மதிக்கவில்லை, இது "ஆர்பிட்ரேஷன் கோர்ட்டாகும்" : ஆஸ்திரியா, ருஷியா இவர்களுடைய சம்மதியின்றி இந்தக் காரியம் முடியாது என்று சொல்லிவிட்டார். (White Paper No. 43.)

லண்டனிலுள்ள ஜெர்மனியின் தூதர் நாலு தேசத்தாரும் சேர்ந்து மத்யஸ்தம் செய்யலாமென்பதை நல்ல யோசனையாக ஒப்புக்கொண்டார். (White Paper No. 46.) ஆனால் ஜுலை மாஸம் 28-ந்தேதி பெர்லினிலுள்ள இம்பீரியல்சான்ஸெலர் எப்படியாவது சமாதானமாகப் போகவேண்டுமென்று அவர் மிக்க விரும்புவதாகமட்டும் சொல்லி, மத்யஸ்தம் கூடவே கூடாதென்று தள்ளிவிட்டார்.

ரோமாபுரியிலுள்ள பிரிடிஷ் தூதர் ஜெர்மனி மந்திரிகள் சொல்லும் வார்த்தைகளிலுள்ள பேதத்தை யெடுத்துக்காட்டி பெர்லின் நகரிலுள்ளவர்கள் சொல்வதுதான் உண்மையென்று வற்புறுத்தினர். (White Paper No. 80). ஜுலைமீ 28-ந்தேதியில் தானே ருஷியா கவர்ன்மெண்டார் பிரிடிஷ் மந்திரி பிரேரேபித்த மத்தியஸ்த ஆலோசனையை ஒப்புக்கொள்ள தமக்கு இஷ்டமென்று தெரிவித்தார்கள். (White Paper No. 53.)

"பூசினிக்காய் திருடின கள்ளன் கதை"

பிரிடிஷ் ராஜாங்கத்தில் அந்யதேச காரியங்களைப் பார்க்கும் மந்திரியாகிய ஸர் எட்வர்ட் க்ரே அவர்கள் ஆஸ்திரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் சண்டையானால் அது "காட்டுத்தீபோல் எங்கும் பற்றிக்கொள்ளுமே" யென்று அஞ்சினதையறிந்து ஜெர்மனியும் ஆஸ்திரியாவும், அவர் பயப்படவேண்டாமென்றும் ஸெர்வியா நாட்டைப்பிடித்துக் கொள்வதில்லை யென்று வாக்குறுதி கொடுத்தால் ருஷியா சம்மதித்துத் திருப்தியாய் விடுமென்றும் உறுதிவாக்குக் கொடுத்தார்கள். இது பூசினிக்காய் திருடவந்து, தவறிவிழுந்துவிட்ட கள்ளன் தான் ஸ்வர்க்க லோகத்திலிருந்து குதித்து விட்டதாகவும் 'பூலோகம் இது தானா? மானிடவர் நீங்கள் தானா?' என்று கேட்டு ஆசீர்வாதம் செய்த கதை யொத்திருந்தது. ஆனால் ருஷியாவோ ஸெர்வியா நாட்டை மட்டுமல்ல, ஸெர்வியா கவர்ன்மெண்டின் ஸ்வதந்தரத்தையும் தொடக்கூடாதென்று ஸ்பஷ்டமாய்த் தெரிவித்திருந்தார்கள். ஆஸ்திரியா அனுப்பிய கறார் நாமாவில் (Ultimatum) ஸெர்வியா கவர்ன்மெண்டின் ஸ்வதந்திரத்துக்குப் பங்கம் வரும்படி யெழுதியிருந்தது. அது கூடாதென்று ருஷியா ஒரே தீர்மானமாகக் கூறியிருந்தது.

"கள்ளனுக்குள் குள்ளன்."

ஜுலை மாஸம் 30 தேதி வரையில் ருஷியாவின் அந்யமந்திரி (Foreign Minister) ஸெர்வியா கவர்ன்மெண்டின் ஸ்வதந்தரத்துக்குப் பங்கம் விளைப்பதாயுள்ள பாகத்தை கறார் நாமாவிலிருந்து களைந்துவிட்டால் ருஷியா

சண்டைக்கு முஸ்தீபு செய்வதை உடனே நிறுத்தி விடுவதாகத் தெரிவித்தார்.

"நொண்டிக் குதிரைக்கு சறுக்கி விழுந்தது சாக்கு."

ஜுலை மாஸம் 28-ந் தேதி ஆஸ்திரியா, ஸெர்வியாவின்மேல் சண்டை தொடுத்தது என்று சொன்னோமே.

ஜுலை மாஸம் 29-ந்தேதியில் பேர்லினிலுள்ள ஜெர்மன் மந்திரி (செக்ரிடெரி) பிரிடிஷ் தூதரிடம் பேசுகையில் பிரிடிஷார் மத்யஸ்தம் செய்யவேணுமென்று நல்ல எண்ணத்தோடு செய்த முயற்சி சமீதியில் சண்டையை விளைத்து விட்டதென்று சைத்திபபாவனை காட்டி ("Very depressed") ச் சொன்னார். ருஷியா சண்டைக்கு முஸ்தீபு செய்து வருகிறதாகவும் பிரான்ஸ் தேசத்திலும் முஸ்தீபு நடந்து வருகிறதாகவும் சொன்னார். அதற்கு ப்ரெஞ்சு தூதர் (Ambassador) "ஜெர்மனியார் செய்த காரியத்தை ப்ரான்ஸும் செய்கிறது: ரஜாவின் பேரில் போன உத்யோகஸ்தர்களைத் திரும்பி வர உத்தரவிட்டிருக்கிறார்கள்" என்று நன்றாக பதில் சொன்னார். ஜெர்மனி கவர்ன்மெண்டு அப்படியொன்றும் செய்யவில்லை யென்று ஜெர்மன் மந்திரி (செக்ரிடெரி) சொன்னார். ஆனால் பேர்லினிலுள்ள பிரிடிஷ் தூதரான ஸர் எட்வர்ட் கோஷன் (Sir E. Goschen) "அது மெய்தான்" என்றார் ("It is true") (White Paper No. 76). உண்மையில் ஜுலை மாஸம் 28-ந் தேதிக்குப் பலநாள் முந்தியே ஜெர்மன் ரிஸர்வ் சைனியத்தைச் சேர்ந்தவர்களெல்லாம் சைனியத்தைச் சேரவேண்டுமென்று உத்தரவு அனுப்பியிருந்தார்கள். ஆர்ஜண்டைன், ஜோஹன்னிஸ்பர்க் போன்ற தொலைதூரத்தில் (ஆபிரிகாவில்) உள்ளவர்களுக்குக்கூட உத்தரவு போயிற்றென்று பிந்தி ருஜூ அகப்பட்டது. இப்படியாக ஜுலை மாஸம் 23 ந்தேதி முதல் 30-ந்தேதி வரையிலுள்ள எட்டு நாளைய சமாச்சாரம் அஷ்டமத்துச்சனிபோல் நம்மைச் சண்டை சச்சரவுக்கு மத்தியில் இழுத்துக்கொண்டுபோய் விட்டு விட்டது.

"காலைச்சுற்றின பாம்பு."

"காலைச்சுற்றினபாம்பு கடித்தாலன்றி விடாது" என்பதாக பழமொழி யொன்றுண்டு. அது போல கர்மம் ஒன்றைச் செய்துவிட்டால் (வித்துப்போட்டால்) அது முளைத்துத் துளிர்த்துத் தழைத்துப் பூத்துக்காய்த்துப் பலனைக் கொடுத்தே தீரும். உள்ளத்தில் நினைத்தது நிறைவேறியே தீரும். சங்கல்பம் ஒருபோதும் வீண்போகாது. சண்டைக்குத் தயாராய் ஆயத்தம் செய்துகொண்டு வந்தார்கள்: அது சண்டையிலேயே வந்து முடிந்தது. ஆயினும் இன்னும் ஒருவாரத்துச் சமாசாரம் சொல்லவேண்டியிருக்கிறது. அதையும் சொல்லித் தீர்த்துவிடுவோம். இதற்கிடையில் ஒரு சின்ன சமாசாரம் இருக்கிறது. அது வேடிக்கையாக விருப்பதால் அதையும் சொல்லிவிடுவோம். பிரிடிஷ் கவர்ன்மெண்டார் இந்த சண்டையில் தலையிட்டுக்கொள்ள மாட்டார்களென்று நம்பியிருந்ததாகவும் அவர்கள் தலையிட்டுக்கொண்டது "நம்பிக்கைத் துரோகம்" என்றும் "படுமோசம்" என்றும் ஜெர்மன் சக்ரவர்த்திமுதல் எல்லாரும் சொல்லித் தூற்றுகிறார்கள். இதன் உண்மை யெப்படி யென்று விசாரிப்போம்.

ருஷியா கவர்ன்மெண்டார்கூட "பிரிடிஷ் கவர்ன்மெண்டார் முனைந்து பிரயத்தனம் செய்திருந்தால் இந்த சண்டையைத் தடுத்திருக்கலா"மென்கிறார்கள். இது சாத்தியமல்லவென்று பிரிடிஷ் அந்ய மந்திரியாகிய ஸர் எட்வர்ட் க்ரேக்குத் தெரியும். ஆகையால் அவர் அதை ஒப்புக்கொள்ளவில்லை.

"அரசமரத்தைப்பிடித்தசனி பிள்ளையாரையும் கூடப் பிடித்தது."

பிரிடிஷ் கவர்ன்மெண்டார் ஒரு கக்ஷியையும் சேரவில்லை. சேருவதாக வாக்குத் தரவுமில்லை. ஏனென்னில் பார்லிமெண்டு சபையினுடைய சம்மதியின்றி வாக்குக் கொடுக்கமுடி

யாது. கொடுத்தாலும் அது செல்லாது. பிரிடிஷ் கவர்ன்மெண்டார் ஒரு கக்ஷியிலும் சேராமல் நடுவுநிலைமையாகவிருந்து வந்தால் சண்டைக்காரர்களை ராசிசெய்து வைக்கலாமென்று பார்த்தார்கள்.

இப்படியவர்கள் ஒன்றிலும் ஒட்டாமல் தனியாக நின்றது யுக்தமோ, அயுக்தமோ, அதைப்பற்றி இப்பொழுது நாமொன்றும் தீர்மானமாகச் சொல்லமுடியாது. சரித்திரக்காரர்தான் அதைத் தீர்மானிக்கவேண்டும். ஆனால் அவர்கள் ஒரு கக்ஷியையும் சேராமல் ஒன்றிலும் ஒட்டாமலிருந்தார்கள் என்பது மட்டும் வாஸ்தவம்: அதில் சந்தேகம் ஒன்றுமில்லை.

"திருடனுக்குத்தோன்றும் திருட்டுப்புத்தி."

"திருடனுக்குத் தோன்றும் திருட்டுப் புத்தி" யென்கிறபழமொழிப்படி மனவில் வஞ்சகம் நினைத்தவர்களுக்கு வஞ்சகபுத்தியே தோன்றும். ப்ரஷியன் கவர்ன்மெண்டாருடைய வஞ்சகத்துக்கு அத்தாக்ஷியாக அந்த தேசத்தை முன்னுக்குக் கொண்டுவந்த மஹா சாமர்த்தியரான ப்ரேடரிக் (Frederick the Great) கைப்பட எழுதிய பத்திரம் ஒன்றிருக்கிறது. அவருடைய உபதேச வாக்குப்படி கள்ளத்தனம், மித்திரபேதம், ஒருவரைச் சேர்ந்து ஒருவரைக் கெடுத்தலாகிய 'சந்திவிக்ரகம்' என்கிற மூன்று தந்திரங்களும் ப்ரஷியன் கவர்ன்மெண்டின் மூலக்கொள்கைகளாகவிருக்கவேண்டுமென்று எழுதிவைத்திருக்கிறார். கொள்ளையிலிருந்து சண்டைக்கும், சண்டையிலிருந்து ராஜ்பத்திற்கும், ராஜ்பத்திலிருந்து ராஜ்பதுரைத்தனத்துக்குமாக விர்த்திபெற்ற ஜாதியார், கீர்த்திபெற்ற காலத்தும் அவர்கள் உள்ளத்துணர்வுக்கு மாறாக நடக்கமுடியுமா? புலியைப் போர்வையிட்டு மூடினாலும் அதன் ஸ்வபாவம் மாறுமா? இப்பொழுது ஜெர்மன் கவர்ன்மெண்டார் (அதாவது ப்ரஷியன் கவர்ன்மெண்டுத் தலைவர்கள்) செய்த சூழ்ச்சி பிறர்க்கு எப்படித் தோன்றினும் அவருடைய மூதாதையிட்ட சட்டத்துக்கு விரோதமின்றி யிருக்கிறது. ஏமாந்துபோனபின் "ஏமாற்றிவிட்டார்கள்" என்று சொல்வதில் காரியம் ஒன்றுமில்லை. ஆனால் அவர்களுடைய சூழ்ச்சியின்னதென்று தெரியவேண்டி அதைச் சொல்கிறோம்.

"கெட்டிக்காரன் புளுகு எட்டுநாளில் வெளிப்படும்"

ஜெர்மன் சக்ரவர்த்தியும் அவருடைய மந்திரிகளும் ப்ரேடரிக் உபதேசப்படி நன்றாக நடந்துகொண்டார்கள்: உலகம் அதை ஒப்புமோ தப்பென்று செப்புமோ அதைப்பற்றியவர்கள் உண்மையில் அதிக கவலைகொண்டவர்களாகத் தோற்றவில்லை. "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் வெளியாகும்" என்பது வாஸ்தவம் என்று அவர்களுக்குத் தெரியும். ஆனால் கெட்டிக்காரன் உண்மையில் "கெட்டிக்காரனால்" "எட்டுநாளில்" உலகைத் தலைகீழாக நிற்கச்செய்து விடலாம் என்பது அவர்கள் துணிபு.

"ப்ரேடரிக் சாஸநமெழுதிவைத்த போதனைகள்."

ப்ரேடரிக் எழுதிவைத்த சாஸநத்தின் முதற்கொள்கைப்படி ஜெர்மனி சண்டைக்குத் தயாராக ஒவ்வொரு ஏற்பாடும் செய்து வருகையில் அதை வெகுகாலம் யாருக்கும் தெரியாமல் ஒளித்து சரஸஸல்லாப வார்த்தைகளாலும் விருந்து வேடிக்கை யுறவுகொண்டாடல் நேசம் பாராட்டல் முதலிய வியாஜங்களாலும் எதிரிகள் சமுசயிக்காதபடி மூடிவைத்துக் காப்பாற்றி வந்தார்கள். ப்ரேடரிக் எழுதிவைத்த சாஸனத்தில் கண்ட துரைத்தன மூலக் கொள்கைகளில் முதலாவதான பிரதம நிபந்தனையை நன்றாகச்செய்து முடித்துவிட்டார்கள். அது இது:—

"பிரதமபாடம்."

(1) "Constant attention must be paid to hiding as far as possible one's plans and ambitions. Secrecy is an indispensible virtue in politics as well as in the art of war."

இதன்பொருள்:—ஒருவர் தம் மனோபீஷ்டத்தையும் அதை நிறைவேற்றச்செய்யும் ஏற்

பாடுகளேயும் ஒளிமறைவாக வைத்திருக்கவேண்டி தன் கவனத்தைச் சலியாது செலுத்தல் வேண்டும். இராஜதந்திரத்திலும் யுத்தத்திலும் இரகஸியம் (அதாவது கள்ளத்தனம்) இன்றியமையாத நற்சாதனமாயிருக்கிறது.

ப்ரஷ்யா கவர்ன்மெண்டாருக்கு அவர்கள் தலைபெடுத்ததுமுதல் இதுதான் பிரதம பாடம். இந்தப்பாடம் படித்துத் தேறினல்தான் அடுத்தபடியிலுள்ள இரண்டாம் பாடத்தைக் கையாட அவர்களால் முடியும். இதில் இப்பொழுதுள்ள ஜெர்மன் சக்ரவர்த்தி கைதேர்ந்தவரென்று காட்டியிருக்கிறார்.

"இரண்டாம் பாடம்."

ப்ரெடரிக் சாஸநத்திலுள்ள இரண்டாவது "மூதுரை" என்னவெனில், மித்திரபேதம். அதையும் அவர் சொல்லியபடி சொல்லித் தமிழ்ப்படுத்திக் காட்டுவோம்.

(2) If possible the Powers of Europe should be made envious and be set against one another in order to give occasion for a coup when opportunty offers.

கூடுமானல் ஐரோப்பாவிலுள்ள இராஜாங்கத்தார்களெல்லாம் ஒருவர்மேல் ஒருவர் பொறாமைப்படும்படி மித்திரபேதம் செய்து ஒருவருக்கொருவர் ஆகாதபடி கலகம் விதைத்துவரவேண்டும். சமயம் நேர்ந்தபோது திடீரென்று ஒரு யுக்திசெய்து அதைப் பிறரறியுமுன் "நினைத்தது முடிக்குமாற்றலால்" காரிய சாத்தியமாகச் செய்து முடித்துக்கொண்டுவிடல்வேண்டும்.

இதிலும் அவர்கள் ப்ரெடரிக் படிப்பினைப்படியே நடந்துகொண்டார்கள். ஆனல் அவர்களொன்று நினைக்க தெய்வமொன்று நினைத்தது. பெல்ஜியம்தேசத்து ஆல்பர்ட் அரசனைக்கொண்டு அவர்கள் சதியோசனை பலிக்காதபடி செய்துவிட்டது. இதிலேதான் வில்லங்கமெல்லாம் வந்து சேர்ந்துகொண்டது. யுத்தம் தொடுத்த மூன்றும்நாள் அதாவது ஆஸ்திரியா ஸெர்வியாவோடு யுத்தம்தொடுத்த 8-ம் நாள் அவர்கள் யுத்தம் தொடுத்த செய்தி கூடத் தெரியாமல் பாரிஸ்நகரைப் பிடித்துக்கொண்டு அங்கிருந்து மேல் ஏற்பாடுசெய்யத் தீர்மானித்திருந்தார்கள். "சொக்கா, சொக்கா சோறுண்டோ? கோழியன்வந்து கெடுத்தாண்டோ!" என்கிற கதையாக பெல்ஜியம்தேசத்து அரசரும் துருப்புகளும் எதிர்பாராத பராக்கிரம வீரியம்காட்டி அவர்கள் செய்த சூழ்வினை பலிக்காதுபோகச் செய்துவிட்டார்கள்.

"மூன்றும் பாடம்."

மூன்றுவது மூதுரை யென்னவென்றல் "சந்திவிக்ரகம்" என்னும் அடுத்துக்கெடுக்கும் தந்திரம். இதை யனுசரித்து பெல்ஜியம் தேசத்தூடே சைனியங்கள்போக இடங்கொடுத்தால் அதனுலுண்டாகும் கஷ்டநஷ்டங்களுக்கெல்லாம் பாத்தியப் பட்டவர்களாய் சண்டைமுடிந்ததும் அதற்குவேண்டிய பிரதிபலன் செய்வதாகச் சொன்னர்கள். அதற்கு பெல்ஜியம் அரசராகிய ஆல்பர்ட் தூங்கின பேர்வழியாகவின்றி "கள்ளனுக்குள்குள்ளன்" என்கிறபடி இவர்களுடைய தந்திரம்பலிக்காதுபோக இவர்களிலும் இரகஸியமாக 1912-ஹு நவம்பர்மீ முதல் அதிரகஸியமாகவே வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் முன்யோசனையோடு "வருமுன்காப்போன்" கதையாகச் செய்துவைத்திருந்தார். ஜெர்மானியர் இதிலும் ஏமாந்துபோனர்கள். பிறரை ஏமாற்ற நினைத்துத் தான் ஏமாந்துபோன அவமானமும் ஆத்திரமும் பொறுக்காமல் சண்டையில் சம்பந்தப்படாத பெல்ஜியம்தேசத்தைத்தாக்கி நாடுநகரங்களையெல்லாம் பாழாக்கி ஜனங்களையும் ஹிம்ஸித்து வருகிறார்கள். இதற்குக் கூலி பகவான்தான் கொடுக்கவேண்டும். அவரும் பாத்திரமறிந்து நல்ல சமயத்தில் படியளப்பார். ப்ரெடரிக் சாஸனத்தின் மூன்றுவது மூதுரையிது:—

(3) It is one of the first Political principles to endeavour to become an ally of that one of

one's neighbours who may become most dangerous to one's State. For this reason we have an alliance with Russia and then we have our back free as long as it lasts.

இதன்பொருள்:—இராஜ தந்திரத்தில் பிரதானமாயுள்ள மூலக் கொள்கைகளில் முக்கியமான தொன்றுண்டு. அது என்னவெனில், அயலார்களில் யாரால் தனது இராஜ்யத்துக்கு அபாயம் விளையக்கூடுமோ அவ்விராஜ்யத்தோடு நேசமாயிருக்கப் பார்க்கவேண்டும். இம்முகாந்திரம்கொண்டே ருஷியாவோடு நேசக்கட்டுப்பாடு செய்துகொண்டிருக்கிறோம். அது உள்ளவரையில் நம்மைப் பின்புறத்தில் ஒருவரும் தாக்கார்கள்.

"தந்திரம் பலிக்காமற்போனது."

இது ப்ரெடரிக் காலத்தில் செய்த தந்திரம். ருஷியர்கள் விழித்துக்கொண்டு ப்ரான்ஸோடு நேசக்கட்டுப்பாடு செய்துகொண்டு விட்டார்கள். இப்பொழுது ஆஸ்திரியா இந்த தந்திரத்தில் அகப்பட்டுக்கொண்டு திக்குமுக்காடித் தவித்துக்கொண்டிருக்கிறது. ருஷியாவைக் கூடிக் கெடுக்கப்பார்த்தார்கள். அவர்கள் ஜாக்ரதையாக விருந்ததால் முடியவில்லை. ஆயினும் "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்றபடி 30-வருஷகாலத்தில் அவர்கள்தேசக் கட்டுப்பாட்டை மிகவும் பலப்படுத்திக்கொண்டு கப்பல் சைனியத்தையும் பலப்படுத்திக் கொண்டு விட்டார்கள். இப்பொழுது ஐரோப்பா கண்டத்தில் இங்கிலாந்தைவிட்டு, ஜெர்மனிக்கு நிகரான கப்பற்படை வலுத்த தேசம் வேறில்லை யென்கலாம்.

"கையால்வல்லவன் வாயால்வல்லவன்."

இப்படி மூவாற்றுஉம் தாம் நினைத்த காரியத்தை முடித்துக்கொள்வதொன்றே பெரிதாகக் கருதி நடந்துகொண்டு வந்தவர்கள் "கையால் வல்லவன் வாயால்வல்லன் சண்டையாக" காரியத்தின்மேலே கண்ணுயிருந்து பழிபாவம் என்பதையுணராமல் தானே பிறர்மேல் பழிபாவம் சுமத்திப்பேசுகிறுர்கள். இவர்கள் செய்த இரகஸ்ய ஏற்பாட்டில் இங்கிலாந்தோடு தற்காலம்சண்டை செய்வதாக உத்தேசமில்லைபோலும்: எப்படியும் அவர்களைச் சண்டைக்குவராதபடி ஒதுக்கிவைக்கத் தந்திரமாய் எவ்வளவோ முயன்று பார்த்தார்கள். பிரிடிஷ் ராஜ்யத்தில் ஐர்லாந்துக்கு 'ஸ்வய ஆக்ஷி' (Self-Government) கொடுக்கும்நிமித்தம் செய்த சட்டத்தினுல் கக்ஷி பலப்பட்டு தேசம் இரண்டுபட்டு "ஸிவில் யுத்தம்" நடக்கும் தருவாயிலிருந்தது.

ஐர்லாந்தில் இருதரத்தாரும் (Ulstermen and Nationalists) ஆயுதபாணிகளாய் 'உருவினகத்தியும் கையுமாய்' நின்றுகொண்டிருந்தார்கள், மாட்சிமைதங்கிய ஜியார்ஜ் அரசர் கலகம்முற்றி ஸிவில் யுத்தமாகமுடியும் என்று அஞ்சி இருகக்ஷியாரையுமழைத்து ஒருவழிக்கு வரவேண்டுமென்று கலந்துபேச அரண்மனையில்தானே ஒரு 'கான்பரென்ஸ்' நடக்க ஏற்பாடு செய்தார். செய்தும் பலிக்கவில்லை.

பசப்பு வார்த்தையும் கசப்புக்காரியமும்.

இப்படி வீடு இரண்டுபட்டிருக்க இங்கிலாந்து அந்நியதேசச் சண்டைகளில் தலையிட்டுக்கொள்ளச் சித்தமா யிராதென்றுணர்ந்து அவர்களோடு ஒருவித ஏற்பாடு செய்துகொண்டு அவர்களை யொதுக்கிவைக்கப் பார்த்தார்கள். அவர்கள் தங்கள் கௌரவத்துக்கு ஹானிவராமல் ஒதுங்கியிருப்பது சாத்தியமாகவில்லை. கெட்டிக்காரன் புளுகுக்கு எட்டுநாள் வாழ்வுதான் உண்டு என்று அறிந்துணர்ந்த ஜெர்மானியர் காலத்தைக் கைநழுவவிடக்கூடாதென்று பிரிடிஷ் கவர்ன்மெண்டாருக்குப் பசப்பு வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே தங்கள் காரியத்தை நடத்தினுர்கள்.

"கண்ணில் மண்ணைத் தூவப்பார்த்தது."

துரியோதனுதியர் தூது நடத்தியதுபோல் கபடமாய் எதிரிகள் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு தங்கள் காரியத்தை முடித்துக் கொள்ளப் பார்த்தார்கள். பெல்ஜியம் தேசத்தரசர் "கள்ளனுக்குள் குள்ளன்" என்கிற வசனம்போல், இவர்களினும் தந்திரவாதியாயிரு

ந்து இவர்களுடைய சூழ்வினை சூதுகளையெல்லாம் நன்றாயறிந்தவராதலால் அவர் இவர்களுடைய பசப்பு வார்த்தையைக்கேட்டு ஏமாந்து போகாமல் பிரிடிஷார் உதவியைக் கோரினர். உடனே பெல்ஜியத்தின்வழி போகக்கூடாதென்கிற உடன்படிக்கைக் கட்டுப்பாட்டுக்குட்பட்டு நடக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதற்கு சரியானபதில் கொடுக்காமல், "ஆபத்துக்கு தோஷமில்லை" (Necessity knows no law) யென்கிற விதிப்படி "எங்களுக்கு ஆபத்து வந்துற்ற வேளையில் பெல்ஜியத்தின்வழி போகாமலிருக்க முடியவில்லை" யென்று சொல்லிவிட்டார்கள்.

"துராகிருதப் பிரவேசம்."

தூது பேசிக்கொண்டிருக்கையிலே ஜுலை மாஸம் 30உ யன்று லக்ஸெம்பர்க் (Luxemburg) மீது படையெடுத்து அத்தேசத்துள் துராகிருதப் பிரவேசம்செய்து அதன்வழியாக ப்ரான்ஸின் எல்லைக்குப்போக ஆரம்பித்துவிட்டார்கள். பெல்ஜியத்துக்கும் "நீங்கள் பெல்ஜியத்தின் வழிபோக இசைந்தால் நல்லதாயிற்று: இசையாவிட்டால் பலாத்காரமாகப் போகத் துணிந்துவிட்டோம்" என்று தெரிவித்தார்கள். ப்ரான்ஸின் எல்லைக்குள் ஜெர்மனி எல்லைக் காவலாளிகள் நுழைந்து 'ஒற்றுப்' பார்க்கிறதாகத் தெரியவந்தது. உடனே ஆகஸ்டுமீ 2உ பிரிடிஷ் கவர்ன்மெண்டார் கப்பல் சைனியங்களை சண்டைக்கு முஸ்தீபு செய்து பெல்ஜியத்தினுள் ஒருஜெர்மன் இராணுவவீரன் காலடிவைத்தாலும் நாங்கள் சண்டை தொடுப்போமென்று "கரூர்நாமா" அனுப்பினார்கள். இதிற் குறிக்கப்பட்ட காலதவணை ஆகஸ்டுமீ 4உ இராத்திரி 12-மணிக்குக் கழிந்தது. அன்றிரவு 12-45-மணிக்கு யுத்தபேரிகை முழக்கலானார்கள்.

"வலியார் எளியாரை யடித்தால் எளியாரைத்
தெய்வம் அடிக்கும்."

வலியார் எளியாரை யெதிர்த்துச் சண்டைபோடுவதில் கௌரவக்குறைவு ஒன்றிருக்கிறது. சரிசமமானவர்களோடு சண்டைபோட்டு ஜயித்தால அது வீரத்துக் கழகாகும். கழுகு ஊர்க்குருவியோடு சண்டைக்குப் போனால் பார்த்திருக்கிறவர்கள் சும்மா விருப்பார்களா? ருஷியர்கள் ஆங்கிலேயர்களுக்கெதிரிகளாகத் தக்கவர்கள் என்கிற பாவனையினாலும், ஸெர்வியர் கவர்ன்மெண்டார் கொடுத்தபதிலினாலும், வீண்சண்டை யென்னத்திற்கு என்றிருந்தவர்கள் அனேகருண்டு. ஆனால் பெல்ஜியத்தினுள் பிரவேசிக்கத் துணியவே உடன்படிக்கைக்கு விரோதமாக "வல்லான் வகுத்தது வாய்க்கால்" என்று அவர்கள் போனதே போக்காய் விட்டுக்கொடுப்பது பிரிடிஷ் கவர்ன்மெண்டார் அந்தஸ்துக்காவது கௌரவத்துக்காவது ஒத்ததாகவில்லை. ஆகையால் சண்டை தொடுக்கவேண்டியது அதியாவசியகமாகவே யேற்பட்டது.

இந்தச்சண்டை "மதுபிந்து நியாயமா" யிருக்கிறதென்று சிலர் சொல்கிறார்கள். வெளிப்பார்வைக்கு அப்படித்தான் தோன்றும்: தோற்றத்தைக்கண்டு "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்று பஹிர்முகபாவனையோடு நிற்கிறவர்கள் எப்படியும் மோசம் போவார்கள் என்பது திண்ணம்.

"ஒன்றே ஜாதியும் ஒருவனே தேவனும்."

"ஒன்றே ஜாதியும் ஒருவனே தேவனும்" என்றபடி மனிதஜாதி ஒன்றே—அதாவது ஒரு கூட்டமாகவே இருக்கிறது வாஸ்தவம். நான் வெளியில் போகிறதாகப் புறப்பட்டால் என்கையும் காலும்மட்டும் வீட்டிலிருக்கமுடியுமா? அதுபோலே, சண்டையென்று ஏற்பட்டுவிட்டால் மனிதவர்க்கம் முழுவதும் அதன் பலாபலனை யனுபவித்தே தீரவேண்டும். "யாரோ செத்தான், எவளோ அழுதாள், இழவுக்கு வந்தவள் தாலியறுத்தாள்" என்றொரு பரிகாச பழமொழியுண்டு. இது பேதபாவனை காரணமாக வுண்டான சித்தவிருத்தியை விளக்கும் பழமொழி.

யாரோ ஒருவன்செத்தால் எவளோ ஒருத்தி யழுவாளா? உடைமையை யிழந்தால் தான் துக்கம்வரும். செத்தவன் எப்படியோ ஒரு விதத்தில் "உடையவனா" யிருந்தால்தான் உடையவளுக்கு அழுகைவரும். தாலி கட்டினவன் இறந்தால்தான் கட்டப்பெற்றவள் தாலியறுப்பாள். இதெல்லாம் ஜனங்கள் உள்ளத்து உறவும் அதைபற்றியும் உளவும்தெரியாமல் பிதற்றும் வார்த்தையென்பதை யுணர்த்தத்தான் அந்தப்பழமொழி யேற்பட்டது.

மனித ஜாதியொன்றே யென்பதற்கு அடையாளமாக ஜனசமூகங்கள் ஒன்றுக்கொன்று சங்கிலித் தொடர்போல் சம்பந்தப்பட்டிருப்பதை, ஊன்றி உள்ளமுணர விசாரிப்போர் நன்றாயறிவார்கள். இந்தச் சண்டையையே எடுத்துக்கொள்வோம்.

"சங்கிலித்தொடர் நியாயம்."

ஆர்ச்டியூக் ப்ரான்ஸ் பெர்டினெண்டையும் அவர் பத்னியையும் † 'ப்ரின்ஸெப்' என்னும் ஒரு மாணவச் சிறுவன் ஜுன்மீ 28உ விராஜிவோ பட்டணத்துத் தெருவில் சுட்டுக் கொன்று விட்டான். இதைச் சாக்கிட்டுக்கொண்டு ஜெர்மனியார் ஆஸ்திரியாவைத் தூண்டிவிட்டு ஸேர்வியாவின் கொட்டத்தை அடக்க இது தான் சமயம் என்று பசப்பு வார்த்தை சொல்லி ஆஸ்திரியாவை சண்டைக்குத் தூண்டிவிட்டார்கள். ஆஸ்திரியாவும் பழவினை தூண்ட ஸேர்வியாவின்மேல் சமுசயங்கொண்டு, ஸேர்வியாவைப் பயமுறுத்தி சண்டைக்கிழுத்தது. ருஷ்யா, ஸெர்வியாவுக்குத் துணையாக நின்றது. ஜெர்மனி ருஷியாவுக்கு விரோதமாக வந்தது: ஜெர்மனி விரோதம் ஏற்படவும் ப்ரான்ஸ் ருஷியாவுக்குத் துணையாகநின்றது. ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்கும் பகையேற்பட, பெல்ஜியம் வழியிலிருந்தது. அதன் வழியேபோக பெல்ஜியத்தைத் தாக்கினார்கள்.

பெல்ஜியம் துணைகோரியது.

பெல்ஜியம் சிங்கக்குட்டிபோல் ஜெர்மனியை எதிர்த்துநின்று அநியாயமாய்த்தன் தேசத்தில் புகுந்து அதர்ம சண்டைதொடுத்த ஜெர்மனியை யடக்க உடன்படிக்கைப்படி கட்டுண்ட பிரிடிஷ் கவர்ன்மெண்டாருடைய உதவியைக் கோரியது. பெல்ஜியத்தின்மேல் அதர்ம யுத்தம்செய்யும் அக்கிரமஸ்தர் கொட்டத்தை யடக்க பிரிடிஷார் சண்டையிற் புகுந்துகொண்டு ப்ரான்ஸுக்கும் ருஷியாவுக்கும் துணையாகவிருந்து உதவவேண்டியதாக வந்துமுடிந்தது. இப்படியாக "சங்கிலித்தொடர்" நியாயம் நன்றாக ஏற்படவில்லையா?

"சோக்கா, சோக்கா சோறுண்டோ, சோழியன்
வந்து கெடுத்தாண்டோ."

பிரிடிஷார் நடுவில்வந்தது ஜெர்மனிக்கு ரஸிக்காமையாலும், அவர்கள் இப்படிச் செய்வார்களென்று தற்சமயம் எதிர்பார்க்காமையினாலும், எதிர்பாராதபடி தர்மவழியில் நின்று அதர்ம அக்கிரமத்தையெதிர்த்த பெல்ஜியத்தைப் பாழாக்கிவிட்டு, அவர்களுக்காகப் பரிந்து கொண்டுவந்த ஆங்கிலேயர்மேல் உக்கிரமாய்க் கோபித்து 'இடியுண்ட நாகம்போல்' சீறிவிழுகிறார்கள். எப்படியும் தர்மமேதான் ஜெயிக்குமென்பது நிச்சயமானாலும், அதர்மம் தலை யெடுத்தாடினால்தானே தர்மம் நிலை நாட்டப்பெறும். இப்பொழுது உலகிலுள்ள தேசங்களெல்லாம் யுத்தத்தில் மனம் பதிந்தவர்களாக விருக்கிறார்கள். எந்தச்சமயத்தில் என்ன சம்பவிக்குமோ தெரியாது. நவம்பர்மீ முதற் கொண்டு ஜெர்மனியின் மித்திரபேதத்தால் துருக்கியோடும் சண்டை நேர்ந்திருக்கிறது. துருக்கி ஜெர்மனி கட்சியைச் சேர்ந்துவிட்

† Cf. "The greatest war of Modern times, and perhaps in the whole history of the human race, was begun by Germany using the crime of a schoolboy in Bosnia as her excuse. On Sunday, June 28th, 1914, a student named Prinzep shot and killed the Archduke Francis Ferdinand, heir to the thrones of Austria-Hungary, and his wife, the Duchess of Hohenberg, in the streets of Serajevo. The Austro—Hungarian Government and its supporter and adviser the German Government, determined to take advantage of the crime to make a great step forward in Europe."—*Wilson's History of the Great War.*

டது. ஜெர்மனியாரோ, கொள்ளைக்காரன் கொள்கையை யனுசரித்து ஜனங்களைப் பீதிக்குள்ளாக்கி அவர்கள் கவர்ன்மெண்டின் பலத்தைக் குலைக்கப்பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட இராக்ஷஸப் போர் புரிவது மற்றவர்களுக்கு என்ன அருவருப்பைத்தரினும் அவர்களுக்கு சகஜமானதாகவே யிருக்கிறது.

ஆபத்சகாயம்.

"ஆபத்துக்குத் தோஷமில்லை" யென்பது சண்டைக்காரன் சொல்லும் குதர்க்கநியாயம். தர்மவழியில் ஆபத்துவந்தால் அந்த ஆபத்தை நீக்கிக்கொள்ள ஆபத்தில்லாத காலத்தில் அனுஷ்டிக்கத் தக்கதாக ஏற்பட்ட விதிவிலக்குகள் ஆபத்துவேளைக் கொவ்வாமைபற்றி அவைகளை மீறிநடப்பது தோஷமாகாது என்றுசொன்னார். "Necessity knows no law" என்பது உண்மையானாலும் "Necessity itself is a law." ஆபத்துக்கு தோஷமில்லை யென்பதுண்மையானாலும் ஆபத்துவருவதே ஒருவிதியை யனுசரித்தாதலால், வினைவிதித்தவன் வினையறுக்காமற் தப்பித்துக்கொள்ள முடியாது.

"மூர்க்கரிடம் தர்மோபதேசம் பலிக்காது."

"ஆசைக்கோரளவில்லை" யாதலால், அதிக ஆசையினால்வரும் ஆபத்துவிளைவு தானாய்த் தேடிக்கொண்டதன்றி அதுவாக வந்ததில்லை. இந்த மூர்க்கரோடு நியாயம்பேசி தர்மமுரைப்பதில் பிரயோசனமில்லை. சண்டைக்கென்று கிளம்பிவிட்டார்களாதலால், சண்டை முகத்தில்தானே அவர்கள் கொட்டத்தை யடக்க வேண்டும். இதற்கு பகவான் ஆபத்ஸகாயனாதலால், உற்றதோர் சமயத்தில் உள்ளபடி கைகொடுத்து தர்மத்தை நிலைநாட்டுவன். ஏனெனில் அது அவன் பொறுப்பு. நாமெல்லாம் அவன் ஆட்டுவிக்க ஆடும் சூத்திரப் பாவைகள். சூத்திரக் கயிறுதான் "இஷ்டம்" என்றுசொல்லும் "ஈசனருள்". அந்த ஈசனருளோடு ஒன்றுபட்ட மனத்தராயிருந்து நடந்துவந்தால் பகவத்சங்கல்பம் வெகு அற்புதமாக நிறைவேறுவதைப் பார்க்கலாம். "பற்றற்றார் பற்றுகப்பற்றி யிருக்குமவன்" என்பதுண்மை.

---

## THE HISTORY OF THE POLES IN RELATION TO THEIR NEIGHBOURS.

[On August 15th the Grand Duke Nicholas, Generalissimo of the Russian Forces, issued a Proclamation in the Polish language, to all Poles, promising to u ite the dismembered portions of their country, and guaranteeing them full liberty of language, religion and Self-Government under the sceptre of the Russian Tsar. This was followed by the Tsar's rescript.]

"The determining factor in Prussian foreign policy was, of course, the Geographical position of the kingdom. Having its origin in the military settlements of the Teutonic Knights on the shores of the Baltic, right in the centre of the Slav population, which extended westward as far as the Elbe in the neighbourhood of Hamburg, Prussia was military from its birth, and, as Frederick said had to be "toujours en vedet'e."

"The eighteenth century found Prussia hemmed in on one side by the Slav Kingdom of Poland. Frederick induced Maria Theresa (in 1772,)to join Prussia and Russia in despoiling that kingdom and accordingly each of the Great Powers took a slice of territory contiguous with its own. Twenty years later, in 1793, Russia and Prussia rounded off their territory with further acquisitions, leaving the kingdom a mere slip in the centre with nominal independence; but even this was forfeited in 1795, when Austria joined in the final partition. The kingdom of Poland disappeared and the King retired with a pension to St. Petersburg."

# போலண்டு ராஜ்யமும் போல்ஸ் ஜாதியாரும்.

## ஜெர்மனி ராஜ்யம் ஏற்பட்டதின் கதை.

"ஓர் அற்புத விளம்பரம்"

இப்பொழுது நடக்கும் பார'த மஹாயுத்தம் தொடங்கியபின் ருஷியா சைனியங்களுக்கெல்லாம் முக்கிய சேனாதிபதியாகிய க்ராண்ட் டியூக் நிகோலாஸ் என்பவர் ஆகஸ்டு மாஸம் 15-ந்தேதி போலிஷ்பாஷையில் 'போல்ஸ்'களுக்கெல்லாம் இராஜ விளம்பரம் ஒன்று அனுப்பினார். அதில் அவர்களுடைய தேசம் சிதைவுற்றிருப்பதையெல்லாம் ஒன்று சேர்த்து ஸ்வபாஷை, ஸ்வமதம், ஸ்வய ஆட்சி இவைகள் அளிப்பதாகவும் ருஷியாவின் சக்ரவர்த்தியின் குடைக்கீழ் அவர்கள் எல்லா ஸ்வதந்திரங்களும் வித்தித்து ஸ்வராஜ்யப்பேறுபெற்று அனுபவிக்கலாமென்றும் தெரிவித்தார். இதை யொட்டி ருஷியசக்ரவர்த்தி யவர்களுடைய உத்தரவும் கூடவந்தது. இப்படி இவர்களுக்கு இது வரையில் இல்லாத ஸ்வதந்தரங்கள் அளித்ததற்குக் காரணமென்ன? இவர்களுடைய பூர்வோத்தரம் என்ன? இவர்கள் சரித்திரமென்ன? இதையெல்லாம் விசாரித்தறிந்தால் இப்பொழுது நடக்கும் சண்டையின் காரணமும் சண்டைக்காரர்கள் அநுசரிக்கும் தந்திரங்களின் உளவுமர்மமும் தெரியவரும்.

ஸ்லாவ் ஜாதியில் முக்கியமானவர்கள்.

இதைப்பற்றி விசாரிக்கும்பொழுது ஜெர்மானியர்களுடைய சரித்திரமும் இதில் கலந்து வரும். 'போல்ஸ்' ஸ்லாவ் ஜாதியாரில் முக்கியமானவர்கள். இவர்கள் பேரை இங்கிலீஷில் 'Slav' என்றும் 'Sclav' என்றும் எழுதுகிறார்கள்.

இப்பொழுதுள்ள ஜெர்மனி ராஜ்யம் ஏற்பட்ட காலம்.

இப்பொழுதுள்ள 'ஜெர்மன் எம்பையர்' 1871-ம் ஹு ஜனவரி மாஸம் 1 தேதி ப்ரான்ஸ் தலைநகரும் ப்ரெஞ்சு 'சக்ரவர்த்தியின் அரண்மனை ஸ்தானமுமாகிய பாரிஸுக்கு அடுத்த வேர்ஸேய்ல்ஸ்(Versailles) அரண்மனையில் ப்ரஷியா தேசத்தரசரும் இதர ஜெர்மனியரசர்களும் தங்கியிருந்த பொழுது விளம்பரப்படுத்தப்பெற்றது. ஜனவரி மாஸம் 18-ந் தேதி ப்ரஷ்யா அரசராகிய உவில்லியம் முதலாவது சக்ரவர்த்தியாக அங்கீகரிக்கப்பெற்று இதர மன்னர்களால் மரியாதை செய்யப்பெற்றார். அதற்கு முன்னால் அவர்கள் ஒற்றுமையின்றிச் சிதறுண்டிருந்தார்கள்.

பூர்வீக ஜெர்மன் சக்ரவர்த்தி

பூர்வம் "ஜெர்மன் எம்பரர்" சார்லிமேன் ஸ்தாபித்த மஹாராஜ்யத்தலைவர் அவர் ஆஸ்திரியாவிலுள்ள வியன்னு (Vienna)வில் வசித்து வந்தார். அவர் தானே "ரோமன் எம்பரர்" ஆகவுமிருந்தார். இத்தலி, கேப்ள்ஸ் நாடுகளுக்கு சக்ரவர்த்தியாகவிருக்கும் முறையில் அவர் போப் அவர்களால் முடிசூட்டப்பெற வேண்டு. போப் என்பவர் கிறிஸ்துமதத்தலைவர். ஸேய்ண்ட்பீடர் என்னும் யேசுகிறிஸ்துவினுடைய ஆப்திஷ்பரின் பரம்பரையில் பட்டத்துக்கு வந்தவர்கள். யேசுநாதர் ஸ்வர்க்கத்தின் திறவு கோலை அவரிடம் ஒப்புவித்துச் சென்றார் என்னும் ஐதிகம்பற்றி அவருக்கு உலகில் செல்வாக்கு அதிகம். கிறிஸ்துமதம் ஐரோப்பா முழுமையும் பரவியிருந்தது. முடிமன்னர்களெல்லாம் அவர்களுடைய ஆசீர்வாதத்துக்குரியவர்கள்: யாராவது அவருக்கு விரோதமாக நடந்து கொண்டால் அவரை மதப்பிரஷ்டரென்று தள்ளிவைக்கும் அதிகாரம் அவருக்குண்டு. அவர் மதப்பிரஷ்ட உத்தரவு (Bull of Excommunication) பிறப்பித்துவிட்டால் வரிசெலுத்தும் குடி வரிசெலுத்த மாட்டேன் என்னலாம். சிற்றரசர்கள் கப்பம் கட்ட மாட்டோம் என்னலாம். இதர அரசர்கள் "மதப்பிரஷ்டன் அரசைக் கெடுக்கிறான்" என்று சண்டைக்கு வரலாம். ஆதலால் அவரு

டைய செல்வாக்கு மிகுந்திருந்தது. ஆனால் அவர் ஸந்யாச ஆச்ரமம் புகுந்தவராதலால் கத்தி யெடுத்துச் சண்டைபோடுவதற்கில்லை. இல்லாவிட்டாலும் முடிமன்னர்களைக்கொண்டு தம் காரியங்களை முடித்துக்கொண்டு வந்தார். அவருடைய அதிகாரம் உலக சத்ராதிபதி யுடைய அதிகாரத்துக்குச் சமமாக விருந்தது. சில அம்சங்களில் மிகுந்துமிருந்தது. கி. பி. 9-வது நூற்றாண்டு முதல் 17-வது நூற்றாண்டு வரையில் சக்ரவர்த்திப்பட்டம் சூட்டப்பெற்ற வர்களெல்லாம் "நாளைக்குவருமென்று நினைத்த பலாப்பழத்துக்காசைப்பட்டு இன்றைக்குக் கையிலுள்ள களாக்காயையிழந்தவர்களாயிருந் தார்கள்". அல்லது, இன்னொரு உவமானம் செப்பலாம். மாம்ஸத்துண்டை வாயில் கௌவி யிருந்த நாய் தண்ணீரில் அதன் பிரதிபிம்பத் தைக்கண்டு அந்த மாம்சத்துக்காசைப்பட்டு வாயிலிருந்த மாம்சத்துண்டை நழுவவிட்ட கதையாக ஏமாந்திருந்தார்கள். சார்லிமேனு டைய இராஜ்யம் சீர்குலைந்தும் அவருடைய பட்டமும் பேரும் மட்டும் தொடர்ந்து இருந்தது. இப்பொழுதுள்ள 'ஜெர்மனி' அப் பொழுதில்லை.

ப்ரஷ்யாவின் பூர்வோத்தரம்.

ப்ரஷ்யா நாடும் அதிபூர்வீகமானதில்லை. நீங் கள் ஐரோப்பாவின் படத்தை யெடுத்துப் பார்த்தால், இத்தலி தேசத்துக்கு வடக்கே ஆல்ப்ஸ் (Alps) என்கிற பெரிய மலைத்தொ டர்களிருக்கிறது தெரியும். அதற்கப்பால் "ஸ்விட்ஸர் லாண்ட்" என்னும் தேசமிருக் கிறது. இத்தேசத்து ஞாபகசின்னம் வேண்டு மானால் பள்ளிக்கூடப்பிள்ளைகள் தாங்கள் தரித்திருக்கும் விலைமலிந்த கைக்கடிகாரத்தை யெடுத்துப் பார்க்கட்டும், "Swiss Made"—"ஸ்விட்ஸர்லாந்தில் செய்யப்பட்டது" என்று அதில் வெட்டப்பட்டிருக்கும். அந்த மலைப்பிர தேசங்களில் வசிக்கும் ஜனங்கள் மிகவும் திடகாத்ரமானவர்கள். சந்ததி விர்த்தியதிக மாயுள்ளவர்கள். அத்தேசமோ மலையடர்ந்த நாடு. காட்டுபூமி. அங்கே பிறக்கும் எல்லாருக் கும் போதுமானஜீவனம் கிடைக்க அத்தேசத் தில் போதுமான வளமும் வசதியுமில்லை.

"கையால் வல்லவர்கள்."

ஆதலால், இன்றைக்கும் அத்தேசத்தார் வெளிதேசங்களுக்குச் சென்று கொல்லத்து வேலை, சமையல்வேலை, பரிசாரகவேலை, கடி காரவேலை இவற்றில் கைதேர்ந்தவர்களாய் ஜீவனம் செய்துவருகிறார்கள். பெண்கள் தாதிகளாகவும், சமையல்காரிகளாகவும் வெளி யேறி ஜீவனம் செய்கிறார்கள். ஆதிகாலத் தில் இந்த மலைப்பிரதேசத்தவர்கள் இப்படிப் பட்ட கைத்தொழில்கள் கற்றவர்களாகவில்லை. மலைப்பிரதேசத்தில் பிறந்தவர்களாதலால் புஜ பல, பராக்ரமம், தேஹமனோதிடம், இவை மிகுந்தவர்களாயிருந்தார்கள். ஆகையால் "கை யால் வல்லவர்களான" இவர்கள் தம் மலைநாடு களைவிட்டு வெளியேறிச் சண்டைபோட்டுத் தம் புஜபல பராக்ரமத்தால் வீடுவாசல்கள், நாடுநகரங்களைத் தேடிக்கொண்டு வாழ்வாரா யினர். இவர்கள் முக்யமாய் இரு வகுப்பாய்ப் பிரிந்திருந்தார்கள். அவர்களில் கேல்ட்ஸ் (Celts) ஜாதியார் ஒருவர்; டியூடன்ஸ் அல்லது டாய்ட்ச்ஸ் (Deutsch) (டட்ச்) என்பவர் இன் னொரு ஜாதியார்.

கேல்ட்ஸ், டியூடன்ஸ்.

"Celts and Teutons."

கேல்ட்ஸ் என்பவர்கள் கல்லுளி மிண்டர் களுக்குச் சமானமானவர்கள். அந்த வார்த் தையே சிற்றுளி யென்று பொருள்படும் ஒரு தாதுவிலிருந்துண்டாயது. இப்பொழுது இவர் களுடைய பாஷை பேசுகிறவர்கள் ப்ரிடன்ஸ், வெல்ஷ், ஹைலாண்டர்ஸ், ஸ்காட்ஸ், ஐரிஷ்.

"கொள்ளைவீரர்கள்"

Robber Knights.

ட்யூடன்ஸ் அல்லது 'டாய்ட்ச்ஸ்' என்றால் "ஜனங்கள்" என்று அர்த்தம். இவர்கள் முதலில் சண்டைசெய்து பிழைத்துவந்தார்

கள். சண்டை செய்வதிலும் கொள்ளையிடுவதிலும், வெகு சமர்த்தர்கள். இவர்கள் எப்போதும் வேல் தரித்திருந்ததால், பின்னால் இவர்கள் கொள்ளையிடுவது பலத்து சண்டையிடுவது தொழிலாகக்கொண்டபொழுது பூர்விகர்களான "ஜெர்மன்ஸ்" (வேல்-தரித்தவர்கள் வேலாயுதர் (Germans=Spearmen) பேரை இவர்களும் தரித்தார்கள். இவர்கள் ரைன் (Rhine) நதிதீரத்தில் குடியேறினபொழுது இவர்களுக்கு (Robber Knights) கொள்ளை வீரர்கள் என்று பேர் வழங்கிவந்தது. "க்ரூஸேட்" என்கிற மதயுத்தங்களில் இவர்கள் பாலஸ்தீனுக்கு ஏராளமாகச் சென்று அங்கே ஸரஸன்ஸ் என்னும் துருக்கரோடு சண்டையிட்டு மாண்டு மடிந்துவந்தார்கள்.

"குடி உயரல்" : "ஹன்ஸாலீக்."

அந்தக் காலத்தில் இவர்களுடைய ஹிம்சை யடங்கியிருந்தது. அச்சமயத்தில், இவர்களுடைய லூட்டியின்றி வசித்த வர்த்தக வியாபாரிகளும் இதர பட்டணவாசிகளும் சேர்ந்து இவர்கள் கொட்டத்தை யடக்கவென்று கங்கணம் கட்டிக்கொண்டு வேண்டிய முயற்சியெடுத்து உழைத்துவந்தார்கள். இப்படி ஒன்றொன்ருய் 100 பட்டணங்கள் சேர்ந்து "ஹன்ஸாலீக்" (Hansa League) என்கிற பெரிய ஐக்கிய சங்கத்தை யேற்படுத்தின பின் இவர்கள் வேலையற்றுத் திரிய ஆரம்பித்தார்கள்.

"நைட்பட்டம்"—"இராஜசேவகம்."

Institution of the Order of Knights.

இவர்களால் அபாயம் வராதபடி இவர்களை இராஜ்யத்துக்காகச் சண்டை செய்யவேண்டி "இராஜசேவகத்தில்" அமர்த்திக்கொண்டு "நைட்ஸ்" என்கிற பட்டம் கொடுக்கப்பெற்றார்கள். (Knight) "நைட்" என்றால் (Servant of the Crown) "இராஜசேவகன்" என்று பொருள் படும்.

"இராஜசேவகர்களுக்கு முக்யத் தலைவர்."

Grandmaster of the Teutonic Order.

பிந்தி யிவர்கள்தானே "கௌண்ட்"கள் என்கிற மாகாணாதிபதிகளானார்கள். இவர்களுக்கு "டியூடானிக் நைட்ஸ்" என்று பேர். பிறகு அது இவர்களுக்கு ஸமூகப்பேராக விளங்கியது. இவர்களுடைய இனத்தார் குழுக்காய் இருந்தார்கள். சக்ரவர்த்தியின் கை சளைத்தபொழுது இவர்கள் கைவலுத்து 'டியூக்' என்றும் "ப்ரின்ஸ்" என்றும் பேர்பெற்று தங்கள் சிறிய நாடுகளை ஆளும் ஸ்வாதீன அரசர்களாக ஆனார்கள். இப்படிப்பட்டவர்களில் ஒருவர்தான் ப்ரஷியா அரசாயிருப்பவரும். பூர்வம் இவர் (இப்பொழுது பெர்லின் நகரிருக்கிற சிறு நாடான) "ப்ராண்டன்பர்க்" மாகாணத்துக்கு அதிபராய் "மார்க்ரேவ்" Margrave என்கிற பட்டத்தோடு "டியூடானிக்" நைட்ஸ் இனத்துக்குத் தலைவராயிருக்கும் அந்தஸ்துப் பெற்றிருந்தார். அப்பொழுது அவருக்கு "Grand Master of the Teutonic Order" என்கிற பட்டமும் அதற்குள்ள அதிகாரமும்தானிருந்தது. சமயத்துக்குத் தக்கபடி அண்டை அயலாரை ஜயித்தும் கூடிக் கெடுத்தும் "ப்ரஷ்யா அரசன்" என்கிற பட்டத்துக்கு வந்தார்.

மஹாதீரரான ப்ரேடரிக்.

Fredericke the Great.

இந்த இராஜ்யமும் 19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் மஹாதீரரான ப்ரேடரிக் (Fredcricke the Great) காலத்தில்தான் சிறும்செல்வாக்கும் பெற்று முன்னுக்கு வந்தது. இவர்தான் 1814-ம் வருஷத்தில் நெபோலியன் கொட்டத்தை யடக்கின அரசர்களில் ஒருவர். 'வாடர்லூ' சண்டையில் அவன் முறியடிக்கப் பெற்றான். ஆனாலும் ப்ரெஞ்சுக்காரர்கள் அவர்களைத் தலையெடுக்க விடாமல் தானே யடக்கிவந்தார்கள். 1870-ம் வருஷத்தில் மூன்றாவது நெபோலியன் ப்ரான்ஸுக்குச் சக்ரவர்த்தியாக விருந்தபொழுது மறுபடியும் சண்டையுண்டாயிற்று. அப்பொழுது உவில்லியம் என்பவர் ப்ரஷ்யா அரசராயிருந்தார்.

### ஸெடான் சண்டை.
### Battle of Sedan.

அப்பொழுது உண்டான சண்டையில் மெட்ஸ் நகரண்டையில் ப்ரெஞ்சு சைனியங்கள் தோற்றுப்போய் 'ஸெடான்' (Sedan) என்னுமிடத்தில் தப்ப வழியின்றி அகப்பட்டுக்கொண்டார்கள். நெபோலியன் சக்ரவர்த்தி தப்பியோடவும் வழியின்றி தன்னுடைய கத்தியை அனுப்பி ப்ரஷ்யா அரசனுக்குக் கீழ்ப்படிந்து போனார். அப்பொழுது ப்ரெஞ்சு சைனியமெல்லாம் அவர்கள் வசமாயது.

### ஜெர்மனியின் ஐக்கிய பத்தியம்.
### German Unity.

அப்புறமும் பிரான்ஸிலுள்ளவர்கள் (குடியரசு) "ரிபப்ளிக்" என்கிற பேர்வைத்துக் கொண்டு சண்டை செய்ய பாரிஸ் மேல் படையெடுத்துச் சென்று வேர்ஸேய்ல்ஸ் அரண்மனையைப் பிடித்துக்கொண்டார்கள். அங்கேயிருக்கும்போதுதான் ஜெர்மனி சிற்றரசர்களெல்லாரும் "ஒத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்கிறதின் உண்மை யுணர்ந்தவர்களாய் உடனே அவர்களெல்லாரும் ஐக்கிய பத்தியம் குலையாது ஒன்றுபட்டிருக்கவேண்டுமென்று 26-சிற்றரசுகளும்* "டச்சீஸ்" ('டச்சி' † யென்பதின் பன்மை) என்கிற சிறுநாடுகளும் சேர்ந்து "எம்பையர்" என்கிற ஐக்கிய ராஜ்யமாக விருக்கத் தீர்மானித்து அதன் ஸ்தாபனத்தை உடனே விளம்பரப் படுத்தினார்கள்.

### ஜெர்மனியின் முதல் சக்ரவர்த்தி

அந்த ஜெர்மனி ஐக்கிய ராஜ்பத்துக்கு முதல் சக்ரவர்த்தியாக, 'டியூடானிக் நைட்ஸ்' என்கிற இனத்துக்குப் பூர்வீக முக்கிய தலைவரும் ப்ரஷியா அரசருமாய் சண்டையில் பிரதானஸ்தராயிருந்த முதலாவது உவில்லியம் அவர்களைத் தெரிந்தெடுத்தார்கள். இது 1871-ம் வருஷம் ஜனவரிமாசத்தில் ஏற்பட்டது. இவருக்குப்பின் இரண்டாவது சக்ரவர்த்தியாக வந்தவர் "எம்பரர் ப்ரெட்ரிக்" என்பவர். இவர்தான் இப்பொழுதுள்ள "இரண்டாவது உவில்லியம்" சக்ரவர்த்தியின் தகப்பனார். முதலாவது உவில்லியம் சக்ரவர்த்தியின் குமாரர், நமது விக்டோரியா மஹாராணியின் ஜேஷ்ட குமாரத்தியை இவருக்கு மணம்புரிந்து கொடுக்கப் பட்டிருந்ததால், இப்போதுள்ள ஜெர்மனி சக்ரவர்த்தி விக்டோரியா மஹாராணியவர்களின் பெண்வயிற்றுப் பேரனாகிறார்.

* Principalities = சிற்றரசு நாடுகள்.

† 'டியூக்' பட்டவர்த்தனர் நாட்டுக்கு 'டச்சி' யென்று பேர்.

### ஜெர்மனியின் ஐக்கிய பத்தியத்தில் சேர்ந்த நாடுகள்.

ஜெர்மன் எம்பையரில் சேர்ந்த தன்னரசு நாடுகள் பூர்வம் 26. அவற்றில் முக்கியமான வை:—(1) ப்ரஷ்யா, இது பால்டிக் கடலுக்கும் போலண்ட ராஜ்பத்துக்கும் இடையிலேயுள்ளது. இதற்கு வடகிழக்கே (2) பொமரேனியா இருக்கிறது. பொமரேனியாவுக்குத் தெற்கே (3) ப்ராண்டன்பர்க் இருக்கிறது. ப்ரஷியா அரசர்களுக்கு இதுதான் பிதிரார்ச்சித சொத்து. இங்கேதான் பேர்லின் நகரிருக்கிறது. பெர்லினுக்கு நேர் கிழக்கே (4) போஸேன் இருக்கிறது. இவ்விரண்டிற்கும் தென்கிழக்கே ஸைலீஷியா (Silesia) இருக்கிறது. இதற்குக் கிழக்கே பொஹிமியாவுக்கு வடக்கே (6) ஸாக்ஸனி யரசு இருக்கிறது. இது ஓர் சிறிய இராஜ்ஜியம். இதிலேதான் லீப்ஸிக், ட்ரேஸ்டன் என்கிற முக்கியபட்டணங்களிருக்கின்றன. இதற்குச் சற்று வடகிழக்கு முகமாய்ப் போனால் (7) ஸாக்ஸனி யென்னும் பெரிய மாகாணமிருக்கிறது. இந்த ஸாக்ஸனி இராஜ்பம், டச்சி இவைகளின் வழியே எல்ப் என்னும் நதியோடுகிறது, இந்நதிக்கரையோடு சென்றால் இதற்கு வலதுபுறத்தில் (8) மெக்ளென்பர்க் என்னும் டச்சியிருக்கிறது. இது பெர்லினுக்கு வடகிழக்கேயுள்ளது. எல்ப் நதிமுகத் துவாரத்தில் முக்கியமான ஹாம்பர்க் பட்டணமிருக்கிறது. இது (9) ஹால்ஸ்டெய்ன் (Holstein) நாட்டிலுள்ளது. இங்கே இன்னொரு முக்கிய

ஸ்தலம் லுபெக் (Lubeck). இதற்கு வடக்கே ஹால்ஸ்டெய்னேத் தொடர்ந்ததாய் கீழ்பக்கம் பால்டிக் கடலும், மேல்பக்கம் வடகடலும் சூழ்ந்துள்ளது (10)ஷெல்ஸ்விக் (Schleswig) டச்சி. 'எல்ப' நதிக்கு இடதுபக்கத்திலும் வடகடலுக்குத் தென்பக்கத்திலுமாக இருப்பது (11) ஹானேவர் (Hanover). ஹானேவருக்குத் தென்கிழக்கே (12) வெஸ்ட்பாலியா (Westphalia). இங்கேதான் பேர்போன க்ருப் கம்பெனியின் மஹாபெரிய ஆயுதசாலைகளிருக்கும் (Essen) 'எஸ்ஸன்' பட்டணமிருக்கிறது. இதற்குத் தென்-தென்கிழக்கே (S. S. W.) 19-மைல் தூரத்தில் ரைன் நதிக்கரை. அந்நதி தீரமாகிய ரைன்மாகாணத்தில் 'டுஸ்ஸல்டார்ப்' என்னும் ஆகாய ரதசாலையுள்ள பட்டணமிருக்கிறது. இந்த ரைன்மாகாணம் (13) மேல்ரைன் என்றும் (14) கீழ்ரைன் என்றும் இருபாகமாகவிருக்கிறது. ரைன் நதிக்குக் கிழக்கே (15) நாஸ்ஸோ (Nassau), (16) டாம்ஸ்டார்ட் (Damstarat) (17) ஹெஸ்ஸி (Hesse) (18) காஸெல் (Cassel) என்கிற மிகவும் சிறியநாடுகளிருக்கின்றன. இவைக்குத் தெற்கே (19) பலடினேட் (Palatinate) என்னும் பவேரியாவின் ஒருபாகமிருக்கிறது. இதற்குத் தெற்கே (20) லாரெய்ன் (Lorraine) இருக்கிறது. இதகுப் பூர்வீகப்பேர் (லாதரிங்கியா) இதுவும் இதற்குத் தெற்கேயுள்ள (21) ஆல்ஸேஸ் மாகாணமும் நேராக ஜெர்மன் எம்பரர் ஆளுகைக்குள்பட்டதாக விருக்கிறது. இவையிரண்டும் ரைன், மூஸெல் நதிகளுக்கு இடையே இருக்கின்றன. ஆல்ஸேஸுக்கு மேற்கே (22) பேடன் (Baden). இதற்கு மேற்கே (23) உவர்டம்பர்க் (Wurtumburg) இருக்கிறது. இதற்கும் மேற்கே (24) பவேரியா (Bavaria). பவேரியாவுக்கு வடக்கே (25) துரிஞ்சியா (Thuringia). (26) ஸ்வேபியா(Swabia). ப்ரஷ்யாவின் வடமேற்கில் கோனிக்ஸ்பர்க் பட்டணம் இருக்கிறது. இவையெல்லாம் சேர்ந்தது ஜெர்மனி மஹா-ராஜ்யம், அல்லது 'எம்பையர்'.

## ஜெர்மனியின் சரித்திர ஸாரம்.

## The Moral of the History of German Unity.

ஜெர்மனியின் பூர்வ சரித்திரத்தை வாசிக்கிறவர்களுக்கு ஜெர்மனியின் ஐக்கியபத்திய விசேஷத்தின் பலம் இப்படிப்பட்டதென்று ஸ்பஷ்டமாகத் தெரியும். குழந்தைகளே உங்களுக்கு இராஜ்யங்களின் பேரைச் சொன்னால் மலைப்பாயிருக்கும். ஆகையால் தற்கால ஜெர்மனியின் சரித்திர ஸாரத்தையெல்லாம் சுருக்கி ஒரு கதையாகச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

" சுள்ளிக்கட்டுகதை "

முன்னொரு காலத்திலே 'ஆதிபுருஷன்' என்கிற கிழவனிருந்தான். அவன் யௌவன காலத்திலும் மனிதப் பிராயத்திலும் வெகு பாடுபட்டுழைத்து உலகப்பிரஸித்தி பெற்று விளங்கினன். மூப்பு மேலிடவும் தன்னலொன்றும் செய்ய இயலாமல் தன் பிள்ளைகளைக் கொண்டு தன் காரியங்களையெல்லாம் பார்க்கவிட்டு தான் மட்டும் தன் பிள்ளைகளின் குணகுணங்களைக் கவனித்து நோட்டம் செய்துகொண்டுவந்தான்.

பிள்ளைகளின் குணகுணம்.

மூத்தவன் படாடோபமும், டாம்பீகமும், காரியத்தலைவனென்கிற செருக்குமுடையவனயிருந்தான். இவன் தன்னுடைய அந்தஸ்தைக் காப்பாற்ற வேண்டிச் செய்துவந்த ஆடம்பரங்களில் குடித்தன விஷயங்களை நன்ருகக் கவனித்துச் சீர்திருத்த அவகாசமற்றவனயிருந்தான். மற்றொருபிள்ளை மூத்தவன் தான் காரிய விசாரணை கர்த்தாவானுன். நாம் நம் காரியத்தைப் பார்த்துக்கொள்வோமென்று அவன்மட்டில் அவன் காரியத்தைப் பார்த்துக்கொண்டு பொதுவிசாரணையில் நேர்ந்த ஊழல்களைத் திருத்துவதில் சிரத்தையற்றவனயிருந்தான். மற்றொருவன் தன் ஸ்வகுடும்பம் முன்னுக்கு வரும்வழியிலே கண்ணுயிருந்தான். வேறொருவன் சொந்தமாக வர்த்தக

வியாபாரம் செய்து தகப்பனுரைப்போல் தானும் பிரபலப் பேரெடுக்கவேண்டு மென்று முயற்சித்துவந்தான். இப்படி ஒவ்வொருவரும் ஸ்வகாரியப் புலிகளாய் ஸ்வாமிகாரியம் வழ வழவென்று விட்டுவருவதைப் பார்த்தான் கிழ வன். அவனுக்கு துக்கம் பொறுக்கமுடிய வில்லை. ஆனால் தேஹத்திலோ பலமில்லை. அந்தியகாலம் கிட்டிவிட்டது.

என்னசெய்வான் பாவம்.

பிள்ளைகளெல்லாவரையும் கூப்பிட்டுப் படுக்கையருகில் வைத்துக்கொண்டு "குழந்தை களே எனக்கு அந்தியகாலம் வந்துவிட்டது. இன்னும் சொற்பகாலம் தான் இருப்பேன். ஏற்கனவே மேல்மூச்சு வாங்குகிறது. உங்க ளுக்கு நான் வைத்துள்ள ஆஸ்தியெல்லாம் பதருக்கு ஸமானம். என்னுடைய மெய்ப் பொருளை நீங்கள் ஒருவரும் இன்னும் கைப் பற்றினீர்களில்லை. ஆகையால் ஒரு சோதனை செய்து உங்களுக்கு என்னுடைய மெய்ப் பொருளைக் கொடுக்க நினைத்து உங்களைக் கூப்பிடலானேன். உங்களிஷ்டம் என்ன?" என்று கேட்க, எல்லாரும் "சரி, சரி, அப் படியே செய்யுங்கள். நாங்கள் அந்த சோத னைக்கு உட்படுகிறோம்" என்றார்கள்.

அப்படியானால் ஒவ்வொருவரும் நான் செய்கிற சோதனையில் உள்ளமறிந்து உண்மை யென்று பற்றியதற்கு மாறாக எப்போதும் நடப்பதில்லை யென்று சத்தியம் செய்து கொடுங்கள் என்று கேட்டான்.

"அப்படியே" யென்று எல்லாரும் ஸத்தி யம் செய்து கொடுத்தார்கள்.

"சுள்ளிபொறுக்கல்"

"சரி! நீங்கள் எல்லாரும் ஒவ்வொருவராய்ச் சென்று அவரவர்கள் இஷ்டப்போக்குக்கிசை ந்ததாகவுள்ள இரண்டு சுள்ளிகள் பொறுக்கிக் கொண்டு வாருங்கள் சொல்கிறேன்" என்றான் கிழவன்.

அப்படியே! யென்று எல்லாரும் சென்று ஒவ்வொருவரும் ஒருகைக்கு ஒருசுள்ளியா கப் பொறுக்கிக்கொண்டு வந்து நின்றார் கள். இத்தனை சுள்ளிகளில் எது மிகவும் வலியது கொடுங்கள் பார்ப்போமென்றான் கிழவன். ஒவ்வொருவரும் இது வலிது, இது வலிது என்று கொடுத்தான்.

"பரிசோதனை"

கிழவன் ஒவ்வொன்றாக வாங்கி "எங்கே பார்ப்போம்!" என்று ஒவ்வொன்றையும் ஒடித் துப்பார்க்க எல்லாம் ஒடிந்துவிட்டது.

"உங்கள் பலமெல்லாம் இப்பொழுது இந் தச் சுள்ளிகளின் பலம் அவ்வளவுதான்; நீங் கள் இந்த உலகத்திலிருந்து என்னமாக வாழ் ந்து முன்னுக்கு வரப்போகிறீர்கள்?" என்று கேட்டான்.

எல்லாரும் விழித்துக் கண்ணீர்விட்டுக் கதறினார்கள்.

கிழவன் செய்த உபாயம்.

"அழுவதில் பிரயோஜனமில்லை. எனக்கு மூச்சுத் திணறுகிறது. நான் ஒரு உபாயம் சொல்கிறேன். அதை யெல்லாரும் மனமொற் றுப்பற்றி நடப்பதாக உறுதிவாக்கிட்டால் சொல்கிறேன்" என்றான் கிழவன்.

எல்லாரும் ஒப்புக்கொண்டார்கள்.

"உங்கள் சுள்ளிகளையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து நன்றாகக் கட்டுங்கள் பார்ப்போம். என்றான் கிழவன். அப்படியே வலுக்கக் கட்டினார்கள்.

உங்களில் மிகவும் பலசாலி யார்? என்று கேட்டான்.

"நான், நான்," என்று ஒவ்வொருவரும் முன்னுக்கு வந்தார்.

"இருங்கள்: உங்கள் பலத்தை ஒவ்வொரு வராய்ப் பரீக்ஷிக்கிறேன்" என்று சொல்லி, ஒவ் வொரு பிள்ளையையும் கூப்பிட்டு, "அப்பா நீ இந்தச் சுள்ளிக்கட்டை அப்படியே ஒடி பார்ப்போம்" என்றான்.

ஒவ்வொருவரும் முயற்சித்துப் பார்த்தார் கள்: ஒருவராலும் முடியவில்லை.

இப்பொழுது நீங்கள் எத்தால் வாழலாம்? தெரிந்ததா? என்று கேட்டான்.

எல்லாரும் ஏகோபித்து "ஒத்தால் வாழலாம்" என்றார்கள்.

"மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்"

இந்த உண்மையை மறந்து விடாதேயுங்கள். நீங்கள் செய்துகொடுத்த சத்தியமும் ஞாபகமிருக்கட்டுமென்று சொல்லிவிட்டு கிழவன் பிராணனைவிட்டார்.

ஜெர்மனியின் சரித்திர ஸாரம் முழுவதையும் உங்களுக்குக் கதையாகச் சொல்லிவிட்டேன்.

உவமானத்துக்கு உவமேயம்.

"ஹோலிரோமன் எம்பையர்" என்று சார்லிமேன் அரசாண்ட ஆதி இராஜ்யம் தான் கிழவன். ப்ரஷ்யா உள்பட ஜெர்மனியின் சிற்றரசர் நாடுகளெல்லாம் அந்தக் கிழவனுடைய பிள்ளைகள். இவை தனித்தனியாகச் சிதறிக் கிடந்தபொழுது இவைகளையெல்லாம் சுள்ளிக்குச் சமானமாக நினைத்து ப்ரான்ஸில் தலையெடுத்தோங்கிய "முதலாவது நேபோலியன்" இவர்களை முறியடித்துவிட்டார்.

"எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்."

ப்ரேடரிக் அரசர் இந்த உண்மையை அறிந்து முதலில் தன்னுடைய நாட்டை ஒழுங்குபடுத்தி ஒற்றுமையென்னும் கயிற்றினால் எல்லாருடைய ஹிருதயத்தையும் கட்டி, பலப்படுத்தினார். அதனால் ப்ரஷ்யா மற்ற நாடுகளைவிடப் பேர் பெற்றுப் பலமாய் விளங்கியது. இந்த மர்மத்தை யவருக்குப்பின் வந்தவர்கள் அனுசரித்தும் அவ்வளவாக அதன் உள் சூக்ஷமத்தையுணரவில்லை. 1870-ம் வருஷத்தில் பின்னும் சீர்குலைந்து போகும்படியான ஸ்திதி வந்தபொழுது ஒற்றுமையினலாகும் பயனை யுணர்ந்து எல்லாரும் மறுபடியும் ஒருமனப்பட்டு நடந்துகொண்டார்கள். "கட்டுச்சுள்ளி" சுள்ளியானாலும் அதன் பலம் மூன்றாவது நேபோலியனாலும், அவனுக்குப் பின்வந்த ப்ரான்ஸ் கவர்ன்மெண்டுகளினாலும் முறியடிக்கப்பட முடியாததாயிருந்ததைக் கண்டார்கள். இனி இந்தக் கட்டவிழாமல் இப்படியே நாமெல்லாரும் ஒன்றுபட்டிருக்க வேண்டுமென்று இருந்த இடத்தில் தானே "ஜெர்மன் எம்பையர்" ஸ்தாபனம் செய்தார்கள். அவர்களுடைய பலத்துக்கெல்லாம் காரணம் இதுதான். "எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்" என்னும் பழமொழிக்கு அவர்கள் தேசசரித்திரத்தில் ஓர் உதாஹரணமானார்கள்.

## INFLUANCE OF HERIDITY AND TRADITION.

### பூர்வ வாஸனை.

சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இவர்களுடைய மூதாதையர்கள் மலை நாடுகளிலிருந்திழிந்து இத்தலியிலுள்ள நாடு நகரங்களையெல்லாம் கொள்ளையிட்டபொழுது மேரியஸ் என்னும் அக்காலத்துரோமன் சேனைத்தலைவர் அவர்கள் பலத்தைக் குலைக்கப்பார்த்தார். அவர்கள் நாகரீகமில்லாதவர்களாதலால் ஐக்கியப்பட்டுச் சண்டை செய்ய வழியின்னதென்று தெரியவில்லை.

"குருட்டு யோசனை"

வழி தெரியாவிட்டாலும் எல்லாரும் ஒற்றுமையாக ஒரே குமுக்காய்க் கூடி நின்று எதிர்த்தால்தான் மேரியஸ் சைனியத்துக்கு எதிர்த்து நிற்கலாமென்று மட்டும் கண்டுகொண்டார்கள். திரும்பி ஓடுவோமென்றால் வழியில்லை. ஏனெனில் அவர்களுடைய மலைப்பிரதேசங்களிற்குச் சென்றால் அங்கே பட்டினி கிடந்து குளிரில் விரைத்துச் சாகவேண்டியது தான். எதிர்த்து நிற்கவோ மேரியஸ் கைகாரனயிருந்தார். ஆகையால் அவர்களுடைய அற்ப மதிக்குத் தோன்றியபடி ஒரு உபாயம் செய்தார்கள். அது என்னவெனில் இது:—

"கட்டுப்பாடு"—ஸ்தூலபாவனை.

மலையிலிருந்து இழிந்து வந்தவர்களையெல்லாம், மேரியஸ் சைனியம் மடக்கியடித்து எதிர்த்து நின்று சண்டைபோட்டு ஜயித்தாலன்றி

வேறு தப்ப வழியில்லாமற் செய்தபொழுது, அவர்களெல்லாரும் சண்டையில் சிதறிப் போகாமலிருக்க ஒரு பெரிய கயிறுகொண்டு ஒருவரையொருவர் சேர்த்துக் கட்டிக்கொண்டு சண்டை செய்தார்கள். தத்துவம் உண்மையாயினும் சாதனம் சாதகமளிப்பதாகவில்லை. ஏனெனில் சண்டைமுகத்தில் ஒருவர் பட்டிறந்தால் இறந்தவன்பிணம் மற்றவர்களையெல்லாம் இழுத்துக்கொண்டு விழ அது அவர்களுக்குப் பெரிய இடையூறாயிருந்தது.

ஜெர்மனியின் பூர்வக் குடிகள்.

இப்படி அவர்கள் 11-வருஷம் சண்டை செய்து பார்த்தும் பலிக்காமல் கடைசியில் கி. மு. 102-ம் வருஷத்தில் மேரியஸ் என்னும் ரோமன் சேனைத்தலைவரால் முறியடித்துத் துறத்தப்பட்டார்கள். அப்பொழுதுதான் அவர்கள் 'இத்தலி' தேசத்தை விட்டுவிட்டு (Rhine) ரைன் நதிதீரத்திலும் அதற்கப்பாலுள்ள எல்ப் (Elbe), டானியூப் (Danule) நதிதீரங்களிலும் கொள்ளைக்காரர்களாக குடிப்புகுந்து ப்ரஷ்யா வரையில் ஜெயித்துக்கொண்டு சென்றார்கள். அக்காலத்தில் உழுதுண்டு வாழ்பவரான ஸ்லாவ்ஸ் அந்நாடுகளில் பூர்வங்கொட்டுக் குடியேறியிருந்தார்கள்.

டியூடன்ஸ் ப்ரஷ்யாவைத் தலையெடுக்கச் செய்தல்.

"கட்டுப்பாடு"—ஸூக்ஷ்ம பாவனை.

சுமார் 2000-வருஷ காலத்துக்கு அவர்கள் படாதபாடெல்லாம் பட்டு கெடாதபடியெல்லாம் கெட்டுக் கடைசியில் 1871-ம் வருஷத்தில் பூர்வம் கயிற்றினால் கட்டிக்கொண்டு சண்டைப் பட்டதின் சூக்ஷ்மத்தை யுணர்ந்து, மனக்கட்டுப்பாடு செய்துகொண்டால், கயிற்றினால் கட்டிக்கொண்டு சண்டை செய்வதைவிட மேலாகவும், திறமாகவும், ஜெயம் பெறவும் சண்டை செய்து சமாளிக்கலாம் என்று அறிந்துகொண்டார்கள்.

"சூக்ஷ்மமறிந்தும் காரணம் அறியவில்லை."

இந்த சூக்ஷ்மத்தையவர்கள் அறிந்தார்களாயினும் அவர்களுடைய குணம் மட்டும் முற்றும் மாறவில்லை. முன்னே கயிற்றினால் கட்டிக்கொண்டு சண்டை செய்த புத்திநுட்பத்தைப் போலவே, இப்பொழுது அவர்கள் மன ஒற்றுமையால் வெற்றியடைந்து ராஜ்ய ஸ்தாபனம் செய்த 43-வருஷத்துக்குள் தர்மாதர்மம் பாராமல் மன ஒற்றுமையினாலும் புத்தி விசேஷத்தாலும், உலகையெல்லாம் வென்று தம் அதிகாரத்தை நாட்டிவிடலாமென்று நினைத்து "Necessity knows no law" என்கிற (Robber knights,) கொள்ளைவீரர்கள் கொள்கையை மேற்கொண்டு தர்ம விரோதமாக பெல்ஜியத்தின்மீது வீணே படையெடுத்துச்சென்று அத்தேசத்தைக் கொள்ளையிட்டுக் கொளுத்திப் பாழாக்கிவிட்டார்கள். தர்மத்தின் ஸ்வபாவம் இன்னதென்று இவர்கள் இன்னும் முற்றும் உணரவில்லை.

"பட்டால்தான் தெரியும்."

"தர்மமே ஜபம் என்ற பிக்ஷை" கொடுக்கப் பாத்திரமில்லை. ஆகலால் "பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு" என்கிறபடி புத்தி நுட்பமுடையவர்கள் "புத்திக்குமிஞ்சி" வேறொன்றுமில்லையென்கிற மதம் கொண்டாடுவது, அனுபவத்தில் அதை யனுஷ்டித்து அதனால் வரும் பலனைப்பட்டனுபவித்தால் தான் தெரியும். வாயினால் சொல்லியும் எழுத்தினால் எழுதியும் தர்மோபதேசம் செய்வது பயன்படாதொழியும். பட்டனுபவிக்க வேண்டும். அப்புறம் தான் தெரியவரும்.

இப்படியாக ஜெர்மானியர் பூர்வோத்தரமான கதையைச் சொல்லிமுடிக்க அது இவ்வளவு தூரம் வளர்ந்துவிட்டது. இனி அவர்களுடைய எதிரிகளும் ஸ்வபாவத்தில் அவர்களுக்கு வேறுபட்டவர்களுமான ஸ்லாவ்ஸ் ஜாதியாரால் பூர்வீகம் தொட்டுப் பிரபலம் பெற்று விளங்கி இப்பொழுது இராஜ்யமென்கிற பெருமற்று அண்டையரசர்களால் ஆளுக்கொரு பாகமாகப் பங்கிட்டுக் கொள்ளப்பட்ட போலண்டு சரித்திரத்தைச் சற்று ஊன்றி விசாரித்துப் பார்ப்போம்.

## போல்ஸ் ஜாதியார் சரித்திரம்: முன்னுரை.
## History of the Poles: Introductory.

### The Prussian Foreign Policy.
### ப்ரஷியா அரசர்கள் அந்யதேசத்தாரோடு கூட்டுறவு செய்யும் முறை.

இப்பொழுதுள்ள ஜெர்மனி 19-வது நூற்றாண்டின் முதலில் ப்ரெடரிக் மஹாவீரனென ப்ரஷ்யா அரசர் போட்ட வித்திலிருந்து முளைத்துத் தழைத்ததாகச் சொல்லலாம்.

### "பீஜாங்குரம்"—வித்தும் மரமும்.

அந்த வித்து முளைத்துத் துளிர்த்துத் தழைத்து "ஜெர்மன் எம்பையர்" என்கிற மரமாயிற்று. அது பூத்துக் காய்த்துப் பழுக்கும்பொழுது அந்தப் பழம் தித்திக்குமோ, புளிக்குமோ, கசக்குமோ, துவர்க்குமோ? அதை இப்பொழுதுள்ள ஜெர்மன் சக்ரவர்த்தியும் அவருடைய சந்ததியும் தான் தின்று பார்த்துச் சொல்லவேண்டும். சரித்திரக்காரர் வேலை சரித்திரத்தை உண்மையாகச் சொல்லிக் கொண்டு போகவேண்டியது. போகும்போது கர்மதர்மத்தின் மஹிமையை மறந்துவிடாமல் அங்கங்கே நின்று முன்பின் நோக்கி, "இந்த மரம் இன்ன வித்திலிருந்துண்டாயது; இந்தப் பழம் இன்ன மரத்திலிருந்து காய்த்துப் பழுத்தது" என்று காரணகாரியதோரணை ஞாபகம் மறந்துபோகாமல் ஞாபகக் குறிப்பு எழுதிக்கொண்டே போகவேண்டும்.

2000 வருஷங்களுக்குமுன் கயிற்றினால் கட்டிக்கொண்டு சண்டைப்போட்ட "கட்டுப்பாடு" என்கிறஸ்தூலபாவனை இப்பொழுது (Organisation) என்கிற ஸூக்ஷ்ம "கட்டுப்பாடாக" அமைந்து வேலைசெய்கிறது. தத்துவம் ஒன்றே. தோற்றம் பலவேறுபட்டிருக்கும்.

### ப்ரஷ்யாவின் அரசாட்சி முறை.
### (Principles of the Prussian Government.)

"நாயின்வாலைக் குணக்கெடுக்கலாமா" வென்றொரு பழமொழியுண்டு. அது எப்படி முடியாதோ, அப்படிப்போல ஒரு ஜாதியார் குணத்தையும் மாற்றிவிட முடியாது.

"திருடனுக்குத் தோன்றும் திருட்டுப் புத்தி" என்னும் பழமொழியி னுண்மையை இதற்கு முன்னெடுத்தோதி விளங்க வைத்தோம். அப்படியே "குருடனுக்குத் தோன்றும் குருட்டுப் புத்தி." இதற்கு ஒரு கதை யுண்டு: அதைச் சொல்கிறேன், கேளுங்கள்:—

### "குருட்டுப் புத்தி"—கதை.

ஒரு பிறவிக்குருடனிருந்தான். அவன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது "குழந்தைக்குப் பால் போட்டினையா" என்று தாயார் அகத்துக் காரியம் விசாரித்துக்கொண்டிருக்கக் கேட்டு, அம்மா, அம்மா, பால் எப்படியிருக்கும்?" என்று உன்னைக் கேட்கவேண்டுமென்று இருந்தேன்: மறந்தே போய்விட்டேன். இப்பொழுது அது ஞாபகம் வந்தது என்று சொல்லி "பால் எப்படியிருக்கும் அம்மா?" என்று கேட்டான்.

தாயார், பிள்ளையின் குருட்டுக்குத் துக்கித்து, "அப்பா அது வெள்ளையாயிருக்கும்" என்றாள். "வெள்ளையாக" என்றால் எப்படி? என்று கேட்டான் பிள்ளை.

விவேகமில்லாத தாயார் "கொக்காட்டமாக விருக்கும்" என்றாள்.

"ஐயோ! அம்மாடி! அவ்வளவு பெரியதாயிருக்கிறதைக் குழந்தைக்குக் கொடுத்தால், குழந்தை தொண்டையில் சிக்கிக்கொண்டு செத்துப்போய்விடாதா?" வென்று பிள்ளையாண்டான் விசனமுற்றுக் கேட்டான்.

தாயார் தன் பிள்ளையினுடைய கண்குருடும் தன்னுடைய அஹக்குருடு பெரியதென்று கண்டு, அதற்குத் தக்க சமாதானம் சொன்னாள் என்பது கதை.

வெள்ளையென்பது கேவலம் நிறமாயிருக்க, அதற்கு உருவம் அமைத்தது குருட்டுத்தனத்தால் புத்தி விசாலப்படாதிருந்ததினால் என்றறிக. இது அதிர்சயமில்லை. இதற்கு இன்னொருகதை இவர்கள் சரித்திரத்திலிருந்தே யெடுத்துச் சொல்கிறோம்.

"மரவட்டைபோன்ற மச்சம்!"

ஜெர்மனியைச்சேர்ந்த இராஜ்யங்களில் ஒன்றின் அதிபருக்கு "க்ராண்ட் டியூக்" (Grand Duke) என்கிற பட்டப்பேர். அவருக்கு ஒரு செல்வக் குமாரியிருந்தாள். அவள்தேசத்தில் புருஷர்களெல்லாம் மீசையைச் சரைத்துவிடுவது வழக்கம். சிறிதும் வளரவிட்டால் அது அந்தஸ்துக்குறைவு. ஆகையால் அவள் மீசையைப் பார்த்ததேயில்லை. அடுத்த தேசமாகிய பொஹிமியாவின் இளவரசையவள் மணம் புரிவதாகப் பேசித் தீர்மானித்திருந்தார்கள். மணக்கோலம்கொண்டு புருஷன் வீட்டுக்குப் போகுமுன் அவருடைய அடையாளம் தெரியவேண்டியதற்காக அவருடைய படத்தைக் காட்டினார்கள். அதைப்பார்த்ததும் அந்தப் பிரபுகுலச்செல்வி மாப்பிள்ளை நன்றாகத்தானிருக்கிறார்: ஆனால் மேலுதட்டில் மரவட்டை போல் இரண்டு மச்சங்களிருக்கின்றனவே. அது முகவிகாரம்தான், என்றாள். அவள் மீசையைப்பார்த்து அப்படிச்சொன்னாள். இன்னும் இவளிலும் மேதாவியான சக்ரவர்த்தியொருவரிருந்தார். அவர் கதையிது.

"இருதலைப் பக்ஷி."

"ஹோலி ரோமன் எம்பையர்" க்ஷீணதிசை யடைந்தகாலத்தில் ஆஸ்திரியா சக்ரவர்த்தியா யிருந்தவர்தானே இத்தலிக்கும் சக்ரவர்த்தியாக விருந்துவந்தார். இது பாரம்பரிய சம்பிரதாயமாக மாத்திர மிருந்ததேயன்றி உண்மையான அதிகாரம் அவருக்கில்லை. அவர் இரண்டு இராஜ்யங்களுக்குத் தலைவராயிருப்பதைக் குறிப்பிட அவருடைய கொடியில் எழுதப்பட்டிருந்த கருடன் அல்லது பருந்துப்பக்ஷிக்கு இருதலைகளிருந்தன.

அவை ஒன்றுக்கொன்று எதிர்புறம் நோக்கியிருந்தன. அவர் ஒருநாள் பரிவார ஸஹிதமாக வேட்டையாடப் போனார். அப்பொழுது வேட்டையில் பருந்து ஒன்றைச்சுட்டு வீழ்த்தி இவர் பார்வைக்குக் கொண்டுவந்தார்கள். அதைப் பார்த்துவிட்டு "இது என்ன விகாரமான பக்ஷி: இதற்கு ஒருதலையும் ஒருகழுத்தும் தானே யிருக்கிறது" என்று சொன்னாராம். அவர் தம்தேசத்துக் கொடியிலெழுதப்பட்டிருந்த பக்ஷியைத்தவிர வேறு பக்ஷியைப் பார்த்ததில்லை. ஆகையால் "குருடனுக்குத்தோன்றும் குருட்டுப்புத்தி" யென்பது, அகக்கண், முகக்கண் இரண்டுக்கும் பொருந்தும்.

இப்பொழுதுள்ள ஜெர்மனி சக்ரவர்த்தியைச் சூழ்ந்தவர்கள் "அஹக்கண் குருடு" வாய்ந்தவர்களென்று பல காரணங்களாலும் தோற்றுகிறது.

தீரத்தில் பெரியவரென்று பேரெடுத்த ப்ரேடரிக் அரசன் ப்ரஷ்யாவை முன்னுக்குக் கொண்டு வந்தார். (1819.) அதற்குமுன் அவர்முன்னோர்கள் "ப்ராண்டன்பர்க் மார்க்ரேவ்" (Margrave of Brandenburg) என்கிற பட்டம் மாத்திரம் தரித்திருந்தார்கள்.

"அரசாட்சி முறை."

அவர் "அரசாட்சி முறை" விவரம் எழுதிவைத்திருப்பதில் கள்ளத்தனம், சூது, மித்திரபேதம், அடுத்துக்கெடுத்தல், இதையெல்லாம் அரசாட்சிக்கு இன்றியமையாத குணங்களாகச் சிறப்பித்துச்சொல்லி யிருக்கிறார். "ஜெர்மன் எம்பையரை" ஸ்தாபனம் செய்தவர்களில் முக்கியமானவரான ப்ரின்ஸ் பிஸ்மார்க் இவருடைய உபதேசம் பலிக்கப்பயின்றவர் என்று தெரிகிறது. ப்ரஷியாவின் அந்த உபதேச சம்பந்தமான நடபடிக்கைகள், அத்தேசத்தின் இருப்பிடத்தைப் †பொறுத்ததாக விருக்கிறது. அது 'பால்டிக்' கடற்கரையில் கொள்ளைத் தலைவர்களாயிருந்து பிந்தி "டியூடானிக் நைட்ஸ்" என்று பேர்பெற்ற யுத்தவீரர்கள் குடியேறினதி லிருந்துண்டானது ப்ரஷியா. அதைச் சுற்றியுள்ள தேசங்கள் (Elbe) எல்ப் நதிதீரத்தில் ஹாம்பர்க் நதிவரையில் ஸ்லாவ் ஜாதியாரால் குடியேறப்பெற்றிருந்தது. ஆதலால் அவர்கள் ஆரம்பமுதல் சண்டைபோட்டே ஜீவனம் செய்யவேண்டியவர்களாயிருந்தார்கள். ப்ரே

† Geographical position.

டரிக் "ஆரம்பத்திலெப்படியோ அப்படித்தான் முடிவுவரையிலுமிருந்து தீரவேண்டு"மென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் சண்டை போடுவதும் சண்டைபோட்டுப் பிழைப்பதும் அவர்களுள்ஸ்வபாவம். இதை மறந்துவிடக் கூடாது.

சண்டைக்காரர் பங்கு போட்டுக்கோள்ளல்.

18-வது நூற்றாண்டில் ப்ரஷ்யாவைச்சுற்றி ஸ்லாவ் தேசங்கள் வலுவற்றிருந்தன: அத்தேசத்துக் குடிகளெல்லாம் உழுதுண்டு வாழ்வாராயிருந்தார்கள். ப்ரஷியர்கள் சண்டை போட்டுப் பிழைப்பவர்களாயிருந்தார்கள். 1772-ம் வருஷத்தில் போலண்ட் இராஜ்பத்தை வலுக்குலைக்கவெண்ணி, ப்ரெடரிக், ஆஸ்திரியாவின் சக்ரவர்த்தியாகிய மேரியா தேரிஸாவோடு ஒருபக்கமும், ருஷியாவோடு ஒருபக்கமும் ஐக்கியக்கட்டுப்பாடு செய்துகொண்டு அத்தேசத்தைக் கொள்ளையிட்டு ஒவ்வொருவரும் அவர்கள் தேசத்துக்கடுத்த பாகத்தைத் தங்கள் இராஜ்பத்தோடு சேர்த்துக்கொண்டார்கள்.

இதற்கு 20-வருஷம் கழித்து 1793-ல் ருஷியாவும் ப்ரஷியாவும் இன்னும் சிலபாகங்களை ஜயித்து தங்கள் ராஜ்பங்களோடு சேர்த்துக்கொண்டார்கள். இப்படிப் போனதெல்லாம் போக போலண்ட் இராஜ்யம் ஒரு சிறு துண்டாகமாத்திரம் மிஞ்சியிருந்தது. அதுவும் பேருக்கு மட்டும்தான் ஸ்வதந்தர மனுபவித்து வந்தது. 1795-ம் வருஷத்தில் அதுவும் போய்விட்டது. அத்தேசத்து அரசன் ஜீவனம்சம் (பென்ஷன்) வாங்கிக்கொண்டு ருஷியா தலைநகராகிய "ஸென்ட்பீடர்ஸ்பர்க்" பட்டணத்தில் வசிக்கப்போய்விட்டார்.

"யார் ஆண்டால் என்ன?"

போல்ஸ் ஜாதியார் ஸ்வதந்தரப் பிரியர்களானாலும் அதற்கு எதிர்த்து நிற்கவில்லை. எனெனில் அவர்கள் தங்களுடைய சொந்த கவர்ன்மெண்டே திருப்திகரமாயில்லையென்று உணர்ந்திருந்தார்கள். எல்லாமொன்று யிருக்கும் பொழுது யார் ஆண்டாலென்னவென்று சும்மா விருந்துவிட்டார்கள். அவர்கள் தங்கள் ஜாதி மத பாஷைக்கு விருத்தம் வருமென்று கனவிலும் நினைக்கவில்லை. இந்த விரோதம் இல்லாதபோது இதராராஜ்பங்களின் கீழ் இருந்து ஸ்வதந்தரம் பெறலாமென்கிற ஆசை யொருபக்கமிருந்தது.

"30-வருஷம் வாழ்ந்தவனுமில்லை: 30-வருஷம் கெட்டவனுமில்லை"

இப்படி பங்கு போட்டுக்கொண்டானபின் போல்ஸ் ஜாதியாரில் பெரும்பாலார் ருஷியாவைச் சேர்ந்தவர்களா யிருக்கக்கண்டார்கள். 18-ம் நூற்றாண்டின்முடிவில் நெபோலியன் தலையெடுக்கவும் அவர்களுக்கு நல்லகாலம் பிறக்குமென்று நினைக்கலானார்கள். நெபோலியன் ஆஸ்திரியாவை யடக்கிவிட்டான். ப்ரஷியாவும் அதன் கொட்டமடங்கியிருந்தது. ருஷியாவின் கொட்டத்தைபடக்க அவன் படையெடுத்துச்சென்றான். அதன்கொட்டமும் அடங்கிவிட்டால், போலண்ட் இராஜ்பத்தைச்சேர்ந்த மாகாணங்கள் சிதறிப் போனவற்றை ஒன்றுசேர்த்து அவர்கள் ஒருஜாதியாக விருப்பதால் முன்னுக்கு வரலாமென்று நினைக்கலானார்கள்.

"30-வருஷம் வாழ்ந்தவனுமில்லை!
"30-வருஷம் கெட்டவனுமில்லை"
—யென்பது பழமொழியல்லவா.

பூர்வவிஸ்தீரணம்.

போலண்டு இராஜ்பத்தை 1772-ல் பங்கு போட்டுக்கொள்ளத் தொடங்கு முன் அது பால்டிக் கடற்கரைமுதல் கிட்டத்தட்ட கருங்கடல் (Black Sea) வரையிலும், கிழக்கே நீபர் (Dneiper) நதிமுதல் மேற்கே ஓடர் (Oder) நதிவரையிலும் பரவியிருந்தது.

"ஓலவுகாத்த கிளி"

ரூஸோ (Jean Jackes Rousseau) எழுதிய கிரந்தங்களினாலுண்டான மனோபாவனையில் ப்ரெஞ்சுக்காரர்கள் போல்ஸ் ஜாதியாரிடத்தில் மிகுந்த அனுதாபம் காட்டிவந்தார்கள்.

நெபோலியனும் போல்ஸைக்கொண்டு ஆஸ்திரியாவையும் ருஷியாவையும் அடக்கலாமென்று அவர்கள் ஆசையைக் கிளப்பிவிட்டு வந்தான். போல்ஸ் ஜாதியார் நெபோலியனுக்காக எவ்வளவோ பாடுபட்டு சூதுவாதுகள் செய்து தந்திரமாயும் பஹிரங்கமாய்ப் படைமுகத்திலும் அவனுக்குதவியாயிருந்து சண்டைசெய்து உதவிபுரிந்தார்கள். கடைசியில் நேபோலியன் இவர்களை ஏமாற்றிவிட்டான்.

"வாய்த்தவிடும்போய் அடுப்புநெருப்பும் அணைந்தது."

ஏமாற்றி விட்டானென்று தெரிந்தபின்னும் அவன் பக்ஷமாயிருந்து அதிசு தீரத்தோடு சண்டைசெய்தார்கள். அவருடைய கைப்பொருள் படைவலி யெல்லாம் அவனுடைய சண்டையில் தோற்றுவிட்டு "வாய்த்தவிடும்போய் அடுப்பு நெருப்பும் அணைந்த அம்மையார் கதையாக" இருக்கிறதும்போய் ஏதோ வரப்போகிறதென்கிற ஆசையும் ஒழிந்துபோக மனமுடைந்து நின்றார்கள். நெபோலியன் போலண்ட் தேசத்துக்கு ஒருவித ஸ்வதந்திரமளித்து அதைத் தனிராஜ்யமாக ஏற்படுத்துவதாகச் சொன்னது, ஆஸ்திரியாவைச்சேர்ந்த போலண்டிலிருந்தும் ப்ரஷியாவைச்சேர்ந்த போலண்டிலிருந்தும் ஒரு பாகத்தைச்சேர்த்து "டச்சி அவ் வார்ஸா" (Dutchy of Warsaw) என்பதை யேற்படுத்தினதோடு நின்றது. அதுவும் அவன் அதிகாரம் குலைந்ததோடு போய்விட்டது. ஏனெனில் அதில் பெரும்பாகத்தை ருஷியாவோடு சேர்த்துக்கொண்டு "போலண்ட் ராஜ்யம்" என்கிறபேரால் அதற்கு ஒரு தனி கவர்ன்மெண்டு ஏற்படுத்தி "ட்ஸார்" ருஷியசக்ரவர்த்தி தன்ராஜ்யத்தைச் சேர்ந்ததாகச் செய்துவிட்டார்.

"க்ராகௌ" குடியரசு. (Cracow)

மூன்றாவது போஸன் (Posen) மாகாணத்தைமட்டும் ப்ரெடரிக் உவில்லியம் அரசன் அவர்கள் ஸ்வாதந்திரியம் குறையாமல் அவர்களை மேம்பட நடத்துவதாக வாக்களித்ததின்மேல் ப்ரஷியாவுக்குக் கொடுத்துவிட்டார்கள். ருஷியாவும் ப்ரஷியாவும் இப்பொழுது ஒரே எல்லைப்புறமுடைய ராஜ்யங்களாயின. இது இப்படி ஆயினும் போல்ஸ்ஜாதியார் அவர்களுடைய ஸ்வதந்தரத்தை (Cracow) "க்ராகௌ" வென்னும் சிறிய குடியரசு நாட்டில் காப்பாற்றிவந்தார்கள். போல்ஸ்களுடைய ஆசார அனுஷ்டான ஸம்பிரதாயங்களுக்கெல்லாம் மூலஸ்தானமாயிருந்த அந்த க்ராகௌ பட்டணத்தைப் பிடித்து அதன் ஸ்வதந்தரத்தை யழித்துவிடவேண்டுமென்று ஐரோப்பாவிலுள் பெரிய அரசர்கள் துவஜம் கட்டிக்கொண்டிருந்தார்கள். 1835-ம் வருஷத்திலே இந்த சூழ்வினை செய்து அதை நிறைவேற்றத் தீர்மானமும் செய்திருந்தார்கள். 1846-ம் வருஷத்தில் காலிஷியா (Galicia) வில் கலகமுண்டாக இது தான் சமயமென்று க்ராகௌ பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு அதை ஆஸ்திரியன் போலண்டோடு சேர்த்துவிட்டார்கள்.

1863-ம் ஹுலத்து அக்ரம அழிச்சாட்டியம்.
(The Great revolution of 1863.)

ஸ்வாதீன மனுபவித்த க்ராகௌ ஆஸ்திரியாவோடு சேர்த்துக் கொள்ளப்பட்டதாக, ருஷிய ஆளுகைக்குள்பட்டதான "போலண்ட் ராஜ்யமும்" ஆபத்துக்குள்ளாவதாயிற்று. போலஸ் ஜாதியார் நெபோலியன் காலத்தில் தாங்கள் ஸ்வதந்தரமடைந்துவிடலாமென்று எண்ணியதை விட்டொழித்தார்களில்லை. முற்றும் ஸ்வாதீனமாய் முன்போல் போலண்டு தனியரசு நடத்துவதா யிருக்கவேண்டுமென்கிற ஆசை அவர்களை விட்டதில்லை, அதனாலே ருஷியாவோடு சேர்ந்துள்ள "போலண்ட் இராஜ்யத்துக்கும்" அநர்த்தம் விளைவதாயிற்று. 1831-ம் வருஷத்தில் விண்கலகம் செய்து கிளம்ப, அது பிரயோசனமற்றதாக முடிந்ததன்றி ருஷியாவோடு சேர்ந்த போலண்ட் ராஜ்யத்துக்கு நல்லகாலம் பிறக்கலாமென்கிற எண்ணத்துக்கும் ஹானி விளைப்பதாயிற்று.

1848-வது வருஷத்து அக்ரம அழிச்சாட்டியம்.
(The French Revolution, 1848.)

1848-ம் வருஷம் ப்ரான்ஸில் அக்ரம அழிச்சாட்டியம் நடந்தபொழுது ஐரோப்பாவின் மற்ற தேசங்களில் ஜனங்கள் கலகம் செய்து கிளம்பியதுபோல் போலண்டிலும் கலகம் செய்து பார்த்தார்கள்; அதுவும் பலிக்கவில்லை. அதற்குப்பின் 1849-ம் வருஷம் முதல் 1862-ம் வருஷம் வரையில் இன்னொரு நிதான கக்ஷியார் தலையெடுத்து ருஷியா ராஜ்யத்துக்குள் பட்டுத்தானே ஸ்வயபாஷா ஸ்வதந்திரம், ஸ்வமதானுஷ்டான ஸ்வதந்திரம், ஸ்வ ஆட்சி சுதந்தரம் பெற்று ஜாதியொற்றுமை கலையாமல் ஸ்வராஜ்யப் பேறு பெற்று வாழலாமென்று முயற்சித்து வந்தார்கள்.

"ஆசையை அமுக்கிவிட அங்யரால் ஆமா?"

இதுவரையில் ஸ்வஜாதி மத அபிமானம் கொண்டு ஸ்வய ஆட்சிக்குப் பாடுபடுகிறவர்களை அமுக்கிவிடலாமென்கிற எண்ணம் அனுஷ்டானத்தி லிருந்ததில்லை. ஆயினும் இந்த எண்ணம் மெட்டர்னிச் (Metternich) என்பவர் முயற்சியால் எங்கும் பரவிவந்தது. சென்ற நூற்றாண்டின் மத்தியில் ருஷியா போல்ஸ் ஜாதியார் ஆசையை அமுக்கிவிடவேண்டுமென்று விரும்ப யாதொரு பலவந்தமும் செய்ய நினைக்கவில்லை. 1862-ம் வருஷத்தில் ருஷியா மந்திரியாகிய கார்ட்சகாப் (Gortchakoff) என்பவரை அவர்களை சமாதானபாகத்தானே வழிக்குக் கொண்டுவரப் பார்த்தார். போல்ஸ் ஜாதியாரிடத்தில் அனுதாப சித்தமுடையவரான டியூக் அவ் கான்ஸ்டன்டைன் அவர்களை இராஜப் பிரதிநிதியாக அனுப்பி, போல்ஸ் ஜாதியைச்சேர்ந்தவரும் அவர்களுக்கு அனுகூலம் செய்வதில் பிரிய சித்தருமாகிய மார்குவிஸ் வையிலோபாஸ்கி" (Marquis Vielopolski) என்பவரை வித்யா இலாகா, நீதியிலாகா, பொதுமத இலாகா இவற்றிற்கு மந்திரியாக அனுப்பினர். இவர் ஒரு கக்ஷியிலும் சேர்ந்தவரில்லை. ஆனால் முதிர்ந்த அறிவும் தெளிந்த புத்தியுமுள்ளவராதலால் தன் காலத்துக்கு மேலான சீர் பெற்ற அபிப்பிராயமுடையவராயிருந்தார். இவர்கள் இருவரும் செய்த சமாதான முயற்சி ஒரு கக்ஷியாருக்கும் திருப்திகரமாயில்லை. அவர்கள் மனங்கொதித்து அவர்களைக் கொலை செய்ய ஆரம்பித்தார்கள். கடைசியில் நிதானமில்லாத துணிவு கொண்ட மிதமிஞ்சின கக்ஷிக்காரர்கள் கை வலுக்க அவர்கள் 1863-ம் வருஷத்தில் ஒரு பெரிய கலகம் செய்து அக்ரம அழிச்சாட்டியம் தொடுத்தார்கள். இதுவும் பலிக்காது போகுமென்பது நிச்சயமாயினும் போல்ஸ் ஜாதியார் பஹீரதப் பிரயத்தனங்கள் செய்து தங்கள் ஸ்வதந்தரத்தைத் திரும்பிப் பெறப் பார்த்ததினால் கலகம் நீடித்திருந்து பெரு விபத்து விளைத்தது.

பிஸ்மார்க்கும் ஸ்லாவ்ஸ் விஷயமும்.

1859 முதல் 1862 வரையில் ஸெண்ட் பீடர்ஸ்பார்கில் ப்ரஷியாவுக்கு தூதராயிருந்தபொழுது பிஸ்மார்க் இந்த ஸ்லாவ் ஜாதியார் விஷயத்தை நன்றாகக் கவனித்து யோஜித்து வந்தார். போல்ஸ் ஜாதியார் விஷயம் ருஷியாவில் சமாதானமாக முடிந்ததனால் ப்ரஷ்யாவிலும் அப்படியே செய்யவேண்டி வருமென்று நினைத்து சூழ்ச்சியால் அது பலிக்காதபடி அதற்குவேண்டிய முயற்சி செய்துவந்தார். ருஷியர்கள் சமாதானமாகச் செய்தமுயற்சி விருதாவாகி போல்ஸ்ஜாதியார் அவர்களை ஜயித்தவர்களையெதிர்த்து நின்றபொழுது பிஸ்மார்க் ருஷியாவுக்கு உதவியாக வருபவராக வந்தார். ஐரோப்பாவின் மேற்குப் பாகத்திலுள்ள தேசத்தார் எல்லாரும் ஸ்லாவ் ஜாதியாருக்கனுகூலமாகவும் அவர்களிடம் அனுதாபமுற்றவர்களாகவுமிருக்கிற விஷயம் அவருக்குத் தெரியும். அவர் அவர்களுக்கு விரோதமாக ருஷியாவைச்சேர்வதால் அவர்களெல்லாரும் அவரைத் திட்டுவார்களென்றும் தெரியும். தெரிந்திருந்தும் ருஷியாவினுடைய நேசம் ப்ரஷியாவுக்கு அவசியமா யிருந்தமையால்

அதற்காக வந்ததெல்லாம் வரட்டுமென்று துணிந்துதானே அவர் இப்படி மித்திரபேதம் செய்து அடுத்துக் கெடுக்கத்துணிந்தார். இவருடைய பிரயத்தனம் போல்ஸ் ஜாதியாருக்கு அநர்த்தமாய் முடிந்தது. ப்ரஷியாவின் கீழுள்ள போல்ஸ் ஜாதியாருக்குக் கெடுதல்வராவிடினும் அவர்களுக்குக்காலம் வரவில்லையென்று காத்திருந்தாரேயன்றி வேறில்லை.

1863-ம் வருஷத்துக்கலகம் நேர்ந்ததற்குப்பின் போல்ஸ் ஜாதியாரைக் கொடுமை செய்து துன்புறுத்த ஆரம்பித்துவிட்டார்கள். அவர்கள்செய்த கொடுமைகளாவன:—

(1) உயர்தர வித்யாசாலைகளில் ஸ்லாவ் பாஷை போதிக்கப்படக் கூடாதென்று தடுத்துவிட்டார்கள்.

(2) காதொலிக் மதஸ்தர்கள் சிற்சில ஸ்வதந்திரங்களை யனுபவிக்க அநருகர்களென்று ஏற்படுத்தியது.

(3) போல்ஸ் ஜாதியாருக்கு ஸர்க்கார் உத்யோகம் கிடையாதென்று நிர்ணயித்தது.

(4) ருஷிய உத்யோகஸ்தர்களில் வெறிகொண்டவர்களானவரைத் தெரிந்தெடுத்து போலண்டையாளவென்று அத்தேசத்துக்கு அனுப்பி அவர்களைக் கொடுமையாக ஆளும்படி செய்தது.

இந்தக் கொடுமைகளெல்லாம் ருஷ்யமந்திரி அனுகூல சித்தராயிருந்தும் பிஸ்மார்க்செய்த சூழ்வினையினாலும் ஸ்வகாரியஸித்தியை யுத்தேசத்துச்செய்த தந்திரத்தினாலும் போல்ஸ் ஜாதியாருக்கு நேர்ந்தன. போல்ஸ் ஜாதியாருக்கு ருஷியாவும் பிஸ்மார்க்கும் செய்து வைத்த பிரயோஜனமிது. இதை யவர்கள் மறந்திருக்கமாட்டார்கள்.

## ஆஸ்திரியன் போல்ஸ்.
## (AUSTRIAN POLAND.)

பிஸ்மார்க்செய்த தந்திரத்தினால் ருஷியாவில் போல்ஸ் பெருங்கொடுமை யனுபவித்தார்களாயினும் ஆஸ்திரியாவைச்சேர்ந்த போல்ஸுக்கு அக்காலம் கூடியவரையில் நல்லதாகவேயிருந்தது. ஆஸ்திரியா க்ராகோவைப் பிடித்துச் சேர்த்துக்கொண்டபின் 1846-முதல் 1860-வது வருஷம்வரையில் 14-வருஷகாலம் ஆஸ்திரியா சக்ரவர்த்தி அவர்களை யமுக்கப்பார்த்து அவர்கள் ஆசைக் கிடங்கொடுக்காமல் தானே கொடுமை யிழைத்துவந்தார். அப்புறம் ஒரு ஜாதியாரின் ஆசையை யடக்குவது ஆபத்தாக முடியுமென்று அவரே கண்டுகொண்டு தமது ராஜ்யத்தை ஆள ஒருகட்டுப்பாட்டுக்குள்பட்டதான ஏற்பாடுசெய்தார். இப்படி "கட்டுப் பாட்டுக்குள்பட்ட கவர்ன்மெண்டு" (Constitutional Government) ஏற்படுத்து கையில் ஜனப்பிரதிநிதி சபையொன்று ஏற்படுத்தலானார்.

"14-வருஷக் கெடுபிடி பலிக்காமற்போனது."

1846-ம் வருஷம் காலிஷியாவில் கலகம் நடந்ததுமுதல் போல்ஸ்ஜாதியார் கொட்டத்தை யடக்கவென்று அம்மாகாணத்தில் நிலஸவான்களாயிருக்கிற போல்ஸுக்குள் குடியானவர்களும் பண்ணை வேலைக்காரர்களுமாயிருக்கிற அதிபூர்வீகர்களான ஏழைக்குடிகளை இராணுவத்தில் சேர்த்துக்கொண்டு அவர்கள் இஷ்டமானபடியெல்லாம் போல்ஸ்வாசிகளைக் கொள்ளை யிடவிட்டு ஹிம்ஸித்துவந்தார். இப்படி 14-வருஷம் செய்துபார்த்தும் அது பலிக்காதது கண்டு புதியதுரைத்தன ஏற்பாடு செய்யத்துணிந்தார்.

"போல்ஸ் அபாயம்விட்டு உபாயம்தேடல்"

காலிஷியாவிலுள்ள போல்ஸ் படித்தவர்களும் நிலஸ்வான்களுமாக விருந்தமையால் தங்கள் செல்வாக்கினால் பிரதிநிதி சபையிலுள்ள ஸ்தானங்களையெல்லாம் பிடித்துக்கொண்டு ஒற்றுமையாக விருந்துகொண்டு கவர்ன்மெண்டார்க்கு முடக்குவந்த சமயத்தில் தங்களுக்கு வேண்டிய ஸ்வதந்திரங்களைப் பெற்றுக்கொண்டு தங்கள்வோட்டுகளை யவர்களுக்குக்கொடுத்து, இப்படியாக அநேக ஸ்வதந்திரங்களைப் பெற்றுவிட்டார்கள்.

"ஆர்ப்பாடமில்லாத ஏற்பாடு"

இப்பொழுது ஆஸ்திரியன் போல்ஸ் தங்கள் சொந்த ஜாதி "வைஸ்ராய்" (இராஜப் பிரதிநிதி) தங்களையாளப்பெற்றிருப்பதோடு, சொந்தப் பிரதிநிதி சபைபொன்று மேற்படுத்தப் பெற்றிருக்கிறார்கள். போலிஸ் பந்தோபஸ்து அவர்கள்வசமேயிருக்கிறது. ஸர்க்கார் உத்யோகங்களெல்லாம் அவர்கள் வசமே. அவர்கள் ஸ்வபாஷை ஸ்வதந்தரம் பூராவாகக் கொடுக்கப் பெற்றிருக்கிறார்கள். இப்படியாக போல்ஸ் ஜாதியாருடைய ஸ்வதந்தரம்

"தீங்கற்றோர்க்கங் குண்டு"

என்கிற வசனப்படி, ருஷியாவிலுள்ளவர்களுக்கில்லாதபோது ஆஸ்திரியாவிலுள்ளவர்களுக்குண்டானதாயிருந்து அவர்கள் ஸ்வஜாதி ஸ்வதந்திர விருப்பம் அழியாது மணிவிளக்குப்போல் அவர்கள் ஹிருதயத்து ஒளிர்ந்துகொண்டேயிருக்க ஆஸ்பதமாயிற்று.

இப்படியாக சென்ற 40-வருஷங்களாக போல்ஸ் ஜாதியார் தங்களுடைய ஸ்வஜாதீய ஸ்வதந்தர நோக்கத்தை மறந்துவிடாமல் தானே காப்பாற்றி வந்ததன்றி அவர்கள் எண்ணம் பலிக்குமென்கிற நம்பிக்கையும் உண்டாகும்படி நடந்துகொண்டிருக்கிறார்கள்.

## ருஷியாவின் கீழுள்ள போலண்ட். (Russian Poland)

ஆஸ்திரியாவின் கீழுள்ள போலண்டில் பலித்த ஏற்பாடு முதலில் க்ராகௌவில்ஆரம்பிக்கப் பெற்று இப்பொழுது எங்கும் பரவியுள்ளதாயிருக்கிறது. அங்கே போல்ஸ் ஜாதியார் எல்லாருக்கும் பொதுவான 'ரிவியூ' (பத்திரிகை, யொன்று) பிரசுரிக்கப்பட்டு வருகிறது. தங்கள் பிதிரார்ச்சிதத்தை யிழந்தவர்களான போல்ஸ் எல்லாரும் அப்பத்திரிகையை மத்தியஸ்தானமாகக் கொண்டு அதைச் சூழ்ந்து தங்கள் எண்ணங்களை விர்த்திசெய்து வருகிறார்கள். இங்கேயொரு விஷயம் முக்கியமாய்க் குறிப்பிட்டு மனதில் வைக்கத்தக்கதாயிருக்கிறது. அது இது:—

"பொதுமனமின்றிப் பொதுநலமில்லை."

பொதுஜன க்ஷேமமும் பொதுஜனவிர்த்தியும் பொதுநல சிந்தையைப் பொறுத்தது. பொதுநலம் என்பது "பொதுமனம்" காரணமாக வுண்டாகிறது. "பொதுமனத்திலிருந் துண்டாகும் எண்ணங்கள்" தான் "பொதுஜன அபிப்பிராயம்" என்று சொல்லத் தகும். ஸ்வஜாதி, ஸ்வபாஷை, ஸ்வமதம், ஸ்வதேசம், ஸ்வயஆட்சி, ஆகிய இவையெல்லாம் பொதுமனம் விர்த்திப்பதற்கான சாதனங்களேயன்றி வேறல்ல. "பொதுமனம்" விர்த்தித்து விட்டால் எல்லா துரைத்தன ஸ்வதந்திரங்களும் தானே விர்த்திக்கும். ஏனெனில் "பொதுமனம்" உண்மையில் "ஸமஷ்டிமனம்" ஆகும்.

"ஸமஷ்டிமனம்"

ஸமஷ்டிமனம் ஈசுவரஸங்கல்ப சாதனமானது. ஈசுவர ஸங்கல்பத்துக்கு விரோதமான மனித ஸங்கல்பம் பலிக்காது. "மனிதனொன்று நினைக்க, தெய்வமொன்று நினைக்கிறது" என்னும் பழமொழி "ஜீவேசுவர பேதம்" பாராட்டுவோர் சித்தவிருத்தி பயனற்றதாவதின் காரணத்தைக் குறிக்கிறது. இதற்குச் சரியாக இங்கிலீஷில் ஒரு பழமொழியுண்டு. அது "Man Proposes, God disposes" என்றுள்ளது. மனிதன் ஒன்றைப் பிரேரேபிக்கிறான். கடவுள் அது தர்மம் ஸம்மதமாயிருக்கிறதா வென்று பார்த்துப் பைஸல் செய்கிறார். ஆகையால் "ஒத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்" என்பது எல்லாருக்கும் பொருந்தும். குடித்தன முறையில் குடித்தனத்தார் மனமொத்து இருந்தால் தான் வாழ்க்கை மணம்பெறும். "வீடு இரண்டு பட்டால் கூத்தாடிக் கெளிது." ஜன ஸமூகத்திலும், ஸமுதாய காரியங்களில் ஜனங்களுக்குள் மனஒற்றுமை யிருக்கவேண்டும். இல்லாவிட்டால் மோசம் வரும். "ஊரிரண்டுபட்டால் கூத்தாடிக்கெளிது." எப்போதும், ஒன்றுபட்ட விடத்தில் சுகமும், இரண்டுபட்ட விடத்தில் துக்கமும் உண்டாகும். ஆகலால் தான் "பேதபாவனையை" விசார புத்தியினாலும் விவேக ஞானத்தாலும் களைந்துகொண்டேயிருக்கவேண்டும். இல்லாவிட்டால் துன்பம் வரும்.

பஹிர்-அஹமுகம்: கருவிகரணம்.

துரைத்தனம் என்பதும் இராஜாங்கமென்பதும் "பொதுமனம்" அந்தர் முஹத்தில் (உள்ளத்தினுள்) செய்யும் வேலைகளைச் செய்விப்பதற்காக ஏற்பட்ட பஹிர்முக சாதனங்கள். உலகிலுள்ள ஜனங்களெல்லாரும் மனதொத்துப் போய்விட்டால் அப்பொழுது துரைத்தனம் என்பதே அனவசியமாகும்.

"உள்ளும் புறமும் ஒத்திருக்கவேண்டும்."

ஆதலால் ஆள்வோரும் ஆளப்படுவோரும் ஒருமனப்பட்டுழைக்கவேண்டும். இந்த மனவொற்றுமை குறையக்குறைய துரைத்தனத்தின் சீரும் சிறப்பும் குறைந்துதானிருக்கும். ஆதலால் 'ஸமஷ்டிசேவையில்" கைதேர்ந்தவர்களே பொதுவிஷயங்களைக் கவனித்து தர்ம்ம ஸம்மதமாய் நடத்தவல்லவர்களாம்; அதற்கு அதிகாரிகளும் அவர்களே ஆவர். அந்த அனுபவம் இல்லாதவிடத்து அநர்த்தம் விளையும் தான். ஆதலால் துரைத்தனச் சீர் எல்லாம் பொதுமன அமைப்பைப் பொறுத்ததாகும். என்னதான் படைவலியுள்ள அரசனாயினும், பொதுமன சம்மதமின்றி நடப்பானாயின் அவன் காலக்கிரமத்தில் பொதுமனவிரோதத்துக்காளாகி அழிந்துபோவான். "பலதுளி பெருவெள்ளம்" ஆவதுபோல், பலர் எண்ணம் ஒன்றுசேர்ந்தால் அது பொதுமன சங்கல்பமாகி, தர்ம்ம சம்மதமாயின் ஈசுவர சங்கல்பத்தோடொன்றுபட்டதாகும்.

"மனுதர்மம்"

"வெகுஜனவாக்கு தேவ வாக்குக்கு ஸமானம்" என்று சொல்வது இதனால்தான். பூர்வந்தொட்டுள்ள பழமொழியொன்றும் இதையே கதறுகிறது. "Vox Populi Vox dei" என்பதும் இதையே கூறுகிறது. ஆதலால் எவ்வாற்றானும் மனஒற்றுமைக்கு அனுகுணமானசாதனங்களைத் தேர்ந்தாள்வதே தர்ம துரைத்தனமாகும். இதைத்தான் "மனுதர்மம்" என்று சொல்கிறது. அதாவது, "ஒரு மன்வந்தர காலத்திற்கு மாறாதிருக்கும் தர்மம்" என்று பொருள்படும். இப்பொழுது துரைத்தனச் சீர் காரணமாக "ஆஸ்திரியன் போல்ஸ்" அடைந்த நலத்தை உழைப்புக்காரணமாக ருஷியர் கீழுள்ள போல்ஸ் அடைந்தார்களென்றால் அதனுண்மையைக் கிரகித்துக் கொள்ளும்சக்தி இதை வாசிப்பவர்களுக்கிருக்குமென்று எண்ணுகிறோம். ஆகையால் அடுத்த அதிகாரம் "Industrialisation of Russian Poland" என்னும் தலைப்பேர் பெறும். (2-வது பாகம் மிக விரிந்துவிட்டபடியால், இதை வி-சி-யுத்தகாண்டம் 3-வது பாகத்தில் தொடர்ந்துவரக் காணலாம்.)

## LORD ROBERTS' DEATH.

### Feeling in the Indian Army.

*Delhi, November* 21.—The following from a responsible source has been transmitted to the Viceroy by the Secretary of State dated yesterday :—Late on the night of the 14th November, the news of Lord Roberts' death received by the Indian Head-quarters was communicated to the Corps early this morning. The news was most unforeseen and tragic, following as it does his recent visit. The news was received with profound grief by all ranks. There is no doubt that the only other Englishman who attained anything near the place Earl Roberts filled in the heart of Indian soldier, was John Nicholson. But certainly, no other English soldier has commanded such a measure of human affection. An Indian officer said : "He was truly not only the Colonel-in-Chief of our army but he was our father. He was a pattern of the British Officer under whom we gladly serve—brave, wise and above all full of sympathy. It is sad. What, parting with one like him is not ; but, thank God, we saw him here at the last. If I live, I will be able to tell my children in the Punjab that he shook hands with me and spoke to me in my own language. What death could have been more to his choosing, than to die amid the sound of the guns among us, the army that he loved so well.

All Indian Officers felt the fitness of the end. A Gurad-of-Honour of representatives of the Army Corps watched his last resting Place, Bikanir, Jodhpur, Kishengarh, Cooch Behar, Sir Pertab and others going to the funeral. Sir J. Wilcocks sent a message of sympathy and grief of the Indian Contingent.

## THE LATE LORD ROBERTS.
## காலஞ்சென்ற லார்ட் ராபர்ட்ஸ்.

சென்னையில் முக்கிய சேனாதிபதியாக விருந்து பிந்தி இந்தியா முழுமைக்கும் முக்கிய சேனாதிபதியா யிருந்தவரான பீல்ட்மார்ஷல் ஏர்ல் ராபர்ட்ஸ் அவர்கள் ப்ரான்ஸில் நடக்கும் யுத்தகளத்துக்கு ப்போனவிடத்தில் நவம்பர்மீ 14உ குளிர் தாங்காமல் மூப்பினால் மரண மடைந்துவிட்டார். இவர் இந்தியசைனியங்க ளிடத்தில் மிகவும் விசுவாஸம் வைத்தவர். ப்ரான்ஸில் சண்டைக்குப் போயிருக்கிற இந்திய சைனியங்களுக்கு இவர் கௌரவ கர்னல் (Honorary Colonel-in-Chief). ஆதலால் இந்திய துருப்புகளைப் பார்த்து வரவேண்டு மென்று யுத்த களத்துக்குப் போனார். அவர் போனபோது 'ப்ளாண்டர்ஸ்' மாகாணத்தில் சண்டை நடந்துகொண்டிருந்தது. ஈப்ரெஸ் (Ypres) சண்டை வெகு மும்மரமாய் நடந்து கொண்டிருக்க இந்திய துருப்புகள் அச்சண்டையில் எதிர்த்து நின்றார்கள். ஜெர்மானியர் 'காலே' Calais பட்டணத்தைப் பிடிக்கச் செய்த முயற்சி பலிக்காமற் போயும், அவர்கள் அதே நோக்கமாக அப்பட்டணத்தை நோக்கிச்செல்ல பஹீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார்கள். சாதாரண துருப்புகளால் முடியாத காரியத்தை ஜெர்மனி சைனியத்தில் மிகப் பேர்போன வீரர்களான "க்ரனேடியர் கார்ட்ஸ்" (Grenadier Guards) என்கிற அதிவீரர்கள் மூலமாக எதிரிகளைவென்று ஈப்ரெஸ் (Ypres) மார்க்கமாக காலே பட்டணத்துக்குப் போகப் பார்த்தார்கள். அம்முயற்சி பலிக்காதபடி (Ypres) ஈப்ரெஸ் சண்டையில் அவர்கள் தோல்வியடைந்தார்கள். அந்தச் சண்டை நடந்துகொண்டிருக்கையில் ஏர்ல் ராபர்ட்ஸ் அவர்கள் குளிர் மிகுதியால் பார் நோவு கண்டு சுவாஸப்பையடைத்துக்கொள்ள யுத்த களத்தருகில் துருப்புகளுடன்கூட விருக்கையில் பீரங்கி வெடிகள் கேட்டுக்கொண்டிருக்க மரணமடைந்தார். அவருடைய பிரேதத்தை இராணுவ மரியாதைகளோடு இங்கிலாந்துக்குக் கொண்டுபோய் ஸெய்ன்ட் பால் கோவிலில் அடக்கம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்திய ராணுவங்களின் பிரதிநிதிகளாக ஸர் பிரதாபசிங்குமுதல், ஜாட்பூர், பிகானேர் மஹாராஜாக்களும், இதர இந்திய அரசர்களும் துருப்புகளும் அவருடைய உத்தரக்கிரியை நடக்கும்பொழுது அவருடைய ஞாபகத்தைக் கொண்டாடவென்று இங்கிலாந்துக்கு வந்திருக்கிறார்கள். இந்தியாவில் ஒவ்வொருவரும் அவருடைய மரணத்துக்காக விசனிக்கிறார்கள். இவர் கான்பூரில் பிறந்தவர். உலகெல்லாம் புகழ்பெற்ற மஹா வீரர். ஆயினும் வெகு ஸாது. மிகவும் நல்லவர். பக்தி விசுவாசம் நிறைந்தவர். இவருடைய மரணத்தைக் குறித்து நாமும் துக்கம் கொண்டாடி இவர் பத்தினியாருக்கு அனுதாபங் கூறக் கடமைப்பட்டிருக்கிறோம். இக்கடமையை நமக்காக நமது இராஜப்பிரதிநிதியவர்கள் இவருடைய பத்தினியாருக்கு நவம்பர்மீ 16உ தந்தி மூலமாய் தெரிவிக்க அவரும் நன்றி கூறி 18உ பதில் தந்தி யனுப்பியிருக்கிறார்.

---

## WAR NOTES :—யுத்த சமாச்சாரக் குறிப்புகள்.

சப்பல் சண்டை:—டிஸெம்பர்மீ 8உ காலை 7-மணிக்கு (Falkland Islands) பால்க்லாண்ட் தீவுகளுக்கு சமீபத்தில் வைஸ் - அட்மிரல் ஸ்டர்டீ யவர்களின் கீழுள்ள பிரிடிஷ் கப்பற்படை ஜெர்மன் கப்பற்படை யொன்றைத் தாக்கி, மூன்று ஜெர்மன் சண்டைக்கப்பல்களை மூழ்கடித்துவிட்டதாகச் சமாசாரம். ஐந்து ஜெர்மன் கப்பல்களில் மூழ்கடிக்கப்பட்ட கப்பல்கள் மூன்று போக, 'நியூரெம்பர்க்,' 'ட்ரெஸ்டன்' என்னும் இரண்டு கப்பல்கள் ஓடிப் போய்விட்டன. அவைகளைத் தூரத்திக்கொண்டு

பிரிடிஷ் சண்டைக்கப்பல்கள் பின்தொடர்ந்து போயிருக்கின்றன. சண்டையில் மூழ்கடிக்கப்பட்ட கப்பல்களின் பேர்:—(Scharnhorst) ஷார்நார்ஸ்ட், (Gneisenau) நீஸ்நௌ, (Leipzig) லீப்ஸிக். சமுத்திரத்தில் ஓடிக்கொண்டிருந்த 9-ஜெர்மன் கப்பல்களில் 'எம்டன்' கோகோஸ் தீவண்டை (கீலிங்) விட்னி யென்னும் ஆஸ்திரேலியன் கப்பலால் எதிர்த்துத் தகர்த்துக் கொளுத்திவிடப்பட்டது. கோனிக்ஸ்பர்க் (Koenigsberg), கீயர் (Geier) என்னும் வேறு இருகப்பல்கள் ஹோனுலுலுவில் (Honolulu) † ரூபிகி (Rufigi) நதியில் வெளிப்போவதற்கின்றி சிறைப்படுத்தப்பட்டுள்ளன. பாக்கியுள்ள ஆறு கப்பல்களில், ஷார்நார்ஸ்ட், நீஸ்நௌ, லீப்ஸிக் இம் மூன்றும் டிஸெம்பர்மீ 8உ நடந்த சண்டையில் மூழ்கடிக்கப்பட்டன. நியூரெம்பர்க், ட்ரெஸ்டன் இவ்விரண்டும் சண்டையிலிருந்து தப்பி யோடிவிட, அவைகளைத் துரத்திக்கொண்டு போயிருக்கிறார்கள். கார்ல்ஸ்ரூ (Karlsruhe) என்னும் மூன்றாவது கப்பல் அட்லாண்டிக் சமுத்திரத்தின் தென்பாகத்தில் 15-பிரிடிஷ் வியாபாரக் கப்பல்களை மூழ்கடித்துவிட்டது. இவைகளைத் தவிர துருக்கியார் வாங்கிக்கொண்ட கீபன் (Goeben,) ப்ரெஸ்லா (Breslau) என்னும் இரு ஜெர்மன்கப்பல்கள் ருஷியாவின் கடற்கரை யோரத்தில் தீங்கு விளைக்கப் பார்த்துக் கொண்டிருக்கின்றன. 'கீபன்' கப்பற் சண்டையில் வெடிகுண்டு பட்டு தலைகாட்டாது ஓடிப்பதுங்கிவிட்டது. ப்ரெஸ்லா கப்பல் 'ஸெவாஸ்டபூல்' (Sevastapool) என்னும் ருஷியன் துறைமுகத்தண்டை தலைகாட்ட கப்பற்படைகளாலும்ஆகாசரதப்படைகளாலும் தாக்கப்பட்டது. அவைகளுக்குத் தப்பி அது ஓடிவிட்டது. டிஸெம்பர்மீ 13உ வந்த தந்தி சமாசாரத்தால் 'கீபன்' கப்பல் மறுபடியும் தலைகாட்டி 'பாடூம்' (Batoum) பட்டணத்தைத் தாக்கி 15-வெடிகுண்டுகள் தீர்த்துவிட்டு ஓடிப்போய்விட்டதாகத் தெரிகிறது. மற்ற ஜெர்மன் கப்பல்களெல்லாம் பால்டிக் கடலில் பெட்டியிற் பாம்புபோல் அடைபட்டிருக்கின்றன. இப்படியாக சமுத்திரத்தில் பிரிடிஷ் கப்பல்கள் ஜெர்மன் கப்பல்களை தலைகாட்டவிடாம லடித்திருக்கின்றன. இது ஒரு பெரிய காரியம். (பிந்திவந்த தந்தி சமாசாரத்தால் சில ஜெர்மன் கப்பல்கள் ஆங்கில கடற்கரைப் பட்டணங்களிரண்டைத் தாக்கிவிட்டு ஓடிப்போனதாக சமாசாரம்.)

ஏன்நதிதீரச் சண்டை:—'ஏன்' நதிதீரத்தில் இருதரத்தாரும் இன்னும் விசேஷ தோற்பு கெலிப்பின்றி எதிர்த்துக்கொண்டு நிற்கிறார்கள். ப்ளாண்டர்ஸ் மாகாணத்தில் நடந்து வரும் இதைத் தொடர்ந்த சண்டையில், ஜெர்மானியர் காலே (Calais)க்குப் போகச் செய்த பகீரதப் பிரயத்தனங்கள் இது வரையில் பலிக்கவில்லை. டிஸெம்பர்மீ 11உ வந்த சமாசாரத்தில் ஜெர்மன் சைனியங்கள் (Yser) ஈஸர் நதியின் மேற்குக்கரையை விட்டு ஓடவேண்டியதாக வந்ததாகவும், மேலண்டைப் பக்கத்தில் கூட்டாளிகள் சைனியம் ஸ்திரமாக விருக்க ஏற்பாடு செய்து வருவதாகவும் தெரியவருகிறது.

ஜியார்ஜ் அரசர் விஜயம்.—மாக்ஷிமை தங்கிய ஜியார்ஜ் அரசர் ப்ரான்ஸுக்கு விஜயமாய்ச் சென்று அங்கே அகழ்களிலிருந்து சண்டை செய்யும் துருப்புகளைத் தவிர மற்ற சைனியங்களையெல்லாம் பார்வையிட்டு வந்திருக்கிறார். இந்தியாவிலிருந்து சென்ற சைனியங்களையும் பார்வையிட்டு அநேகருக்குப் பட்டங்கள் கொடுத்து கௌரவித்தாரென்று சமாசாரம்.

ஜெர்மன் சக்ரவர்த்தி:—ஜெர்மன் கெய்ஸர் தேகம் அசௌக்கியமாயிருந்து இப்பொழுது அநுகூலப்பட்டு வருவதாக சமாசாரம். கெய்ஸருக்கும் அவருடைய சேனாதிபதிக்கும் அபிப்பிராய பேதத்தினால் வித்தியாசம் உண்டாக நேரிட்டிருக்கிறதாகவும் சமாசாரம்.

போலண்டில் சண்டை: —" கீழண்டைப் போர்க்களம்." இப்பொழுது ஆஸ்திரியாவைச்

† In German East Africa.

சேர்ந்த போலண்டில் இருந்து வருகிறது. வார்ஸா(Warsaw)வைச் சுற்றிச் சண்டை நடந்துவருகிறது. லாட்ஸ் என்னும் பட்டணத்தை ருஷியர் பிடித்துக்கொண்டு பின்னர் காலிசெய்து விட்டார்கள்.

மேலண்டைப் போர்க்களம்: சண்டைமுகம்.

இந்தப் படம் ப்ரான்ஸிலும் பெல்ஜியத்திலும் ஆங்கில துருப்புகளும் பெல்ஜியன், ப்ரெஞ்சு துருப்புகளும் ஜெர்மனியை எதிர்த்துச் சண்டை போட்டுக்கொண்டிருக்கும் சண்டைமுகத்தைக் காட்டுகிறது. அது வடகடல் ஓரத்தில் ஆஸ்டெண்டுக்குச் சற்று தெற்கேயுள்ள 'நியூபோர்ட்' முதல் 'டிக்ஸ்மூட்' 'ஆர்மென்டைர்ஸ்', 'லா பாஸ்' 'அர்ரஸ்' 'காம்ப்ரெ', 'பிரோன்' வரையில் தென்முகமாக வளர்ந்து 'ஸோம்' நதிக்கரையைத் தாண்டி தென்கிழக்கு முகமாகத்திரும்பி 'நோயன்', 'காம்பீன்' வரையில் சென்று, அங்கேயிருந்து 'ஏன்' நதிதீரத்தோடு அந்நதிக்கு வடகரையில் 'ஸாய்ஸன்ஸ்' என்னும் பட்டணத்தண்டை இருகரையும்




**The Western Theatre of War showing the Belgian and Anglo-French Battle-Front.**

மேலண்டைப் போர்க்கலம். ஆங்கில பெல்ஜியன் ப்ரேஞ்சு சண்டை முக மடங்கியது.

எதிரிகள் வசமாக அவ்விடத்தில் ஆங்கில சேனைகள் ஏன் நதியைத் தாண்டி எதிரிகளை அதற்கு வடக்கேயிருக்கும் குன்றுகளடர்ந்த மேட்டுநிலத்துக்குத் துரத்த அங்கே அவர்கள் பெரிய பீரங்கிகளை வைத்துக்கொண்டு முற்றிகைக்கு வேண்டிய பந்தோபஸ்தோடு க்ஷேத்திரபலம் அறிந்து எதிர்த்து நிற்கக்கண்டார்கள். 'ஏன்' நதிதீரத்துச் சண்டைக்களமும் குன்று பள்ளங்கள் மேடுகளும் "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்கிற தலைப்பெயரிட்டுள்ள படத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இந்தச் சண்டை தேவாசுரர்கள் சண்டையைப் போல் உலகம் 'விஷ்ணுமய'மாயிருந்து மண்ணுயிரைக்காக்க ஏற்பட்டதா, அல்லது ராக்ஷஸ

மயமாக எல்லாரையும் அழிக்க ஏற்பட்டதா என்பதை ஸ்தாபிக்கவே நடந்து வருகிறதாகச் சொல்லலாம். 'ஏன்' நதிதீரத்தில் உன்னதமாம் பார'தப்போர் நடக்கும் யுத்தகளப் படத்தில் 'ஏன்' நதி யோட்டமும் அந்த நதி தீரத்திலுள்ள 'ஸாய்ஸன்ஸ்' 'மிஸ்ஸி', காண்டி', 'வாய்லி' 'காஸ்மி' முதலான ஊர்கள் கிராமங்களும் இருக்குமிடம் காட்டப்பட்டிருக்கிறது.

இந்தப்படத்தில் 'மான்ஸ்' சண்டைக்குப் பின் ஆங்கில-ப்ரெஞ்சு துருப்புகள் ஜெர்மன் சைனியத்துக்குமுன் பின்வாங்கிஸெப்டம்பர்மீ 4௳ ஸீன் நதியின் தென்கரையை அடைந்து மறுபடியும் அங்கிருந்து ஸெப்டம்பர்மீ 5௳ அவர்களை எதிர்த்துத் துரத்தத் தொடங்கி ஏன் நதிதீரத்தின் வடகரையில் அவர்களைக் கொண்டு சேர்த்த விவரங்கள் தேதியோடு காட்டப்பட்டிருக்கிறன்றன.

மான்ஸ்-காண்டியிலிருந்து ஆகஸ்டுமீ 22௳ பின்வாங்கத் தொடங்கி ஆகஸ்டுமீ 25௳ காம்ப்ரே-லாண்ட்ரிஸீஸ் மார்க்கத்திற்குப் பின் வாங்கினார்கள். அங்கிருந்து வெர்மாண்ட்-ஸென்ட்க்வென்டின்-ரிப்மாண்ட் மார்க்கத்தை 26௳யில் அடைந்து, ஆகஸ்டுமீ 28-ல் நோய்ன்-லாபீர் மார்க்கத்தை யடைந்தார்கள். அங்கிருந்து ஆகஸ்டுமீ 30௳ காம்பீன்-ஸாய்ஸன்ஸ் வரையில் பின்வாங்கி ஸெப்டம்பர்மீ 2௳ மார்ன் நதிக்குத் தெற்கே லாக்னி-விட்ரிக்குச் சரியாக வந்து நின்றார்கள். அங்கிருந்து ஸெப்டம்பர்மீ 4௳ ஸீன் நதிக்குத் தென்கரையை வந்தடைந்தார்கள். இதுவரையில் பிரிடிஷ் சைன்யம் பின்வாங்கின விவரங்கள் ஸர் ஜான் ப்ரெஞ்ச் அவர்களுடைய முதலாவது இரண்டாவது ரிபோர்ட்டுகளிலும் தந்தி சமாசாரங்களிலும் காணலாம். ஸெப்டம்பர்மீ 5௳யில் பிரிடிஷ் சைனியம் எதிர்த்து நின்று எதிரியைத் துரத்த ஆரம்பித்தார்கள். ஸீன் நதிதீரத்திலிருந்து மார்ன் நதி தீரத்துக்கு அவர்களைத் துரத்தியடித்து மார்ன் நதி தீரத்தில் நடந்த சண்டையில் எதிரிகளைத் தோற்கடித்தார்கள். பிறகு ஸெப்டம்பர்மீ 10௳ எதிரிகள் ரீம்ஸ் பட்டணத்தை விட்டோடும்படி நேரிட்டது. ஓடும்போது ரீம்ஸ் பட்டணத்தைக் கொளுத்திவிட்டு 'அங்கேயுள்ள அழகான கோயிலைத் தகர்த்துத் தீக்கிரையாக்கிப் பாழாக்கிவிட்டார்கள். அப்படியே காம்பீனை விட்டோடும்படி நேர்ந்தபொழுது அதற்குத் தெற்கே பாரிஸுக்கு 20-மைல் தூரத்திலுள்ள ஸென்லிஸ் பட்டணத்தைக் கொளுத்திப் பாழாக்கிவிட்டார்கள். இப்பொழுது ஏன் நதியின் வடகரையில் க்ஷேத்திரபலமமிந்து முற்றிகை போடும் பீரங்கிகளை வைத்துக் கொண்டு எதிர்த்து நிற்கிறார்கள். ஸெப்டம்பர்மீ 12௳ சாயந்திரம் ஆரம்பித்த சண்டை மூன்று மாசமாக இன்னும் நடந்து வருகிறது. இந்த சண்டைமுகம் மேலண்டைப் பக்கத்தில் வடகடல் வரையில் வளர்ந்துசென்று ஈப்ரெஸ் சண்டையில் முடிந்தும் முடியாமலிருக்கிறது. எதிரிகள் காலேயைப்பிடித்துக்கொள்ள பகீரதப் பிரயத்தனங்கள் செய்தும் பலிக்கவில்லை. கிழண்டைப் பக்கத்தில் சண்டைமுகம் 'வெர்டன்' வரையில் சென்று அங்கிருந்து 'மெல்போர்ட்' வரையில் ஓடி ஸ்விட்ஸர்லாந்து எல்லை வரையில் நீண்டிருக்கிறது. இந்தச் சண்டைமுகம் மொத்தம் 260 மைல் தூரம் விஸ்தீரணமுள்ளது.

---

The "Viveka Chintamani"—The War Number Part I of this Tamil Monthly Contains very interesting articles written in elegant and Chaste Tamil, on "A Page of Secret History" being some of Mr. Asquith's Disclosures and "The Spiritual Governance of the World." The Epilogue, "Righteousness alone triumphs" and the Historical Review "The Slav-vs-Teutons" deserve much Commendation. The articles on "Leave to your children the richest of all Inheritances" is a well-thought-out one. The Translation in verse of the Poet Lauerate's War Song will be much appreciated by the Tamil Reading Public.—*The Hindu* Dated 9-12-14.

# Diary of the War upto September 28.

## யுத்தாரம்ப தினசரிக் குறிப்பு.

ஜுலைமீ. 23உ ஆஸ்திரியா-ஹங்கேரி, ஸெர்வியாவுக்குக் கரூர்நாமா அனுப்பியதேதி.

" 24உ ஆஸ்திரியா-ஹங்கேரியின் கரூர்நாமா, ஸெர்வியா மூலமாக ருஷியாவை சண்டைக் கிழுப்பதாயிருக்கிறதென்று தெரிவித்ததேதி.

" 25உ ஸெர்வியன் கவர்ன்மெண்டார் அனுப்பிய பதில் ஆஸ்திரியாவுக்குத் "திருப்திகரமாயில்லை."

" 28உ ஆஸ்திரியா, ஸெர்வியாவின்மேல் யுத்தம் தொடுத்ததேதி.

" 31உ ஜெர்மனி "யுத்தஸந்நத்த" மாயிருக்கிறதாகத் தெரிவித்த தேதி. ருஷியாவில் சைனியங்கள் சண்டைக்குப் புறப்பட்டதேதி.

ஆகஸ்டுமீ. 1உ ஜெர்மனி ருஷியாவின்மேல் யுத்தம்தொடுத்து, லக்ஸெம்பர்க் என்னும் சிறிய இராஜ்யத்தின்மேல் படையெடுத்துச் சென்றது.

" 2உ ஜெர்மன்ஸ் ப்ரெஞ்சு நாட்டினுட்புகுந்தது. பிரிடிஷ் கப்பல்படைகள் யுத்தம் பழகுவதற்காகக் கூடியிருந்தவை அப்படியே சண்டைக்கு ஆயத்தமாய்ப் புறப்பட்டது.

" 3உ ஜெர்மனி, பெல்ஜியம் தேசத்துக்குக் கரூர்நாமா கொடுத்து, ப்ரான்ஸின்மீது யுத்தம் தொடுத்தல். ஜெர்மன் துருப்புகள் பெல்ஜியத்தின்மேல் படையெடுத்துச் சென்றது. பெல்ஜியம் ஜெர்மனியின் கரூர்நாமாவை நிராகரித்துத் தள்ளியது.

" 4உ பெல்ஜியத்தை சண்டைக் கிழுக்கக்கூடாதென்று பிரிடிஷ் கவர்ன்மெண்டார் ஜெர்மனிக்குக் கரூர்நாமா அனுப்பியதை அவர்கள் நிராகரித்துத் தள்ளியது. யுத்த ஆரம்பம்: பிரிடிஷ் சைனியங்கள் சண்டைக்குப் புறப்பட்டது. லீஜ் அண்டையில் சண்டை நடந்தது.

" 5உ லார்ட் கிட்சனர் யுத்தமந்திரியாக வந்ததேதி. சமுத்திரத்தில் வெடிசுரங்கம்வைக்கும் ஜெர்மன் கப்பல் ஒன்று வடகடலில் பிரிடிஷ் சண்டைக்கப்பல் ஒன்றால் மூழ்கடிக்கப்பெற்றது.

" 6உ பிரிடிஷ் 'க்ரூயிஸர்' (Amphion) ஆம்பியான் என்னும் சண்டைக்கப்பல் கடலிலிட்ட வெடிசுரங்கம் வெடித்து மூழ்கிப்போனது.

" 7உ ஆல்ஸேஸ் மாகாணத்தில் ப்ரெஞ்சு துருப்புகள் வெற்றிபெற்றது. ஆப்ரிகாவில் ஜெர்மனிக்குச் சொந்தமான தென் டோகோலாண்ட் (S. Togoland) பிரிடிஷ் படையால் பிடித்துக்கொள்ளப் பெற்றது.

" 9உ கடலில்மூழ்கி சண்டைசெய்யும் கப்பலான ஜெர்மன் 'ஸப்மாரின்' ஒன்றை பிரிடிஷ் 'க்ரூயிஸர்' (லேசான சண்டைக்கப்பல்) மூழ்கடித்தது. லார்ட் கிட்சனர் இரண்டாவது சைனியத்துக்கு லக்ஷம் பேர்கள் இராணுவவீரராக வேண்டுமென்று கேட்கிறார்.

ஆகஸ்டுமீ'. 10௳ ப்ரான்ஸ் ஆஸ்திரியா-ஹங்கேரியின்மேல் யுத்தம் தொடுத்ததேதி.

" 12௳ பிரிடிஷ் கவர்ன்மெண்டார் ஆஸ்திரியா-ஹங்கேரியின் மீது யுத்தம் தொடுத்தது.

" 15௳ ஜெப்பான் கவர்ன்மெண்டார் சீனவில் ஜெர்மானியர் வசமாயிருக்கும் 'கியோ-சௌ' (Kio Chau) விஷயமாய் அதை விட்டுவிட வேண்டுமென்று ஜெர்மனிக்கு கருர்நாமா அனுப்பியது. பெல்ஜியத்தில் 'டினண்ட்' (Dinant) என்னும் பட்டணத்தில் ப்ரெஞ்சு துருப்புகள் வெற்றி பெற்றது.

" 17௳ பிரிட்டிஷ் யுத்த சைனியங்கள் $1\frac{1}{2}$ லக்ஷம் கொண்டது ப்ரெஞ்சு தேசத்தில் 'பூலோன்' துறைமுகத்தில் வந்திறங்கியது. இங்கிலீஷ் சேனாதிபதி பீல்ட் மார்ஷல் ஸர்ஜான் ப்ரேஞ்ச் அவர்கள் ப்ரான்ஸ் தேசத்து ப்ரேஸிடேண்டு 'பாய்ன்கேர்' அவர்கள் பேட்டிபெற்று யுத்தகளத்துக்குச் செல்லல். ஸெர்வியன் சைனியம் ஆஸ்திரியா சைனியத்தைத் தோற்கடித்தது. ப்ரெஞ்சு துருப்புகள் ஆல்ஸேஸ் மாகாணத்தில் சைனியபலத்தோடு பிரவேசித்துச் செல்லல். ஜெர்மனிக்குச் சொந்தமான ஸ்வாகோப் மண்ட் (German S-W-Africa) நாட்டை அவர்கள் காலிசெய்து விட்டோடியது.

" 18௳ ஜெர்மன் சைனியங்கள் 'டிர்ல்மாண்ட்' (Tirlemont) வரையில் சென்று அங்கிருந்து பெல்ஜியத்தை ஜயிக்கப் புறப்பட்டது.

" 20௳ பெல்ஜியத்தின் சைனியங்கள் 'ஆன்ட்வெர்ப்' கோட்டையில் போய்ப் புகுந்துகொண்டது. ஜெர்மன் சைனியம் பெல்ஜியத்தின் தலைநகராகிய 'ப்ரஸ்ஸெல்ஸ்' (Brussels) பட்டணத்தைப் பிடித்து ஸ்வாதீனப்படுத்திக்கொண்டது. ருஷியர்கள் ப்ரஷியாவின் கீழ்பாகத்தின்மேலும் ஆஸ்திரியாவின்மேலும் படையெடுத்துச் செல்லல்.

" 23௳ ஜப்பான் ஜெர்மனியின்மீது சண்டை தொடுத்த தேதி. 'மான்ஸ்' (Mons) அண்டையில் பிரிடிஷ் சைனியத்துக்கும் ஜெர்மனிக்கும் பெரிய சண்டை. 'நாமூர்' (Namur) ஜெர்மானிய சேனையால் பிரவேசிக்கப்பெற்றது. சில கோட்டைகள் இன்னும் எதிர்த்து நிற்கின்றன. லீஜ் கோட்டைகள் சில இன்னும் எதிர்த்து நிற்கின்றன.

" 24௳ பிரிட்டிஷ்-ப்ரெஞ்சு கூட்டாளிகள் சைனியம் பெல்ஜியத்தை விட்டு ப்ரெஞ்சு எல்லையை நோக்கிப் பின்வாங்கியது. 'கியோ-சௌ'-ஜப்பானியரால் முற்றுகை போடப்பெற்று வெடி குண்டுகளால் தகர்க்கப்பட்டு வருகிறது.

" 25௳ லார்ட் கிட்சனர் லார்ட்ஸ் ஸபையில் பேசியது. ஆல்ஸேஸ் மாகாணத்தில் ஜெர்மானியர் ஆட்டம் அடங்கப்பெற்றது. ப்ரான்ஸின் வடபாகத்திலுள்ள 'காம்ப்ரே' (Cambrai) அண்டையில் பெரிய சண்டை. பிரிடிஷ் சைனியங்கள் சண்டை செய்கின்றன.

ஆகஸ்டுமீ. 26உ காம்ப்ரே சண்டை நடந்து வருகிறது.

„ 27உ ஆஸ்டெண்ட் (பெல்ஜியத்தின் பிரதான கரைதுறைப்பட்டணம்). பிரிடிஷ் கப்பற்படைகளால் பிரவேசிக்கப்பெற்று காக்கப்பட்டு வருகிறது. ஜெர்மன் வியாபாரக்கப்பலாயிருந்து சண்டைக்கப்பலாக மாற்றப்பட்ட 'கெய்ஸர் உவில்ஹெல்ம் டெர் க்ராஸி' (Kaiser Wilhelm der Grosse) ஆபிரிகாவின் மேற்குப் புறத்துச் சமுத்திரக்கரை யருகில் 'ஹைப்ளையர்' (Highflyer) என்னும் பிரிடிஷ் க்ரூயிஸர் கப்பலால் மூழ்கடிக்கப்பெற்றது. ருஷியர்கள் ப்ரஷியா ன் கீழ்பாகத்தின்மீது படையெடுத்துச் சென்றுகொண்டிருக்கிறார்கள்.

„ 28உ லார்ட் கிட்சனர் இன்னொரு லக்ஷம்பேர் இராணுவவீரராகவேண்டுமென்று கேட்கிறார். ப்ரான்ஸின் வடபாகத்தில் ஓயாச்சண்டை நடந்து கொண்டிருக்கிறது.

„ 29உ ஹெலிகோலாண்டுக்கு சமீபத்தில் பிரிடிஷ் கப்பற்படை வெற்றிபெற்றது. 5. ஜெர்மன் சண்டைக்கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. [ஆகஸ்டுமீ 28உ முதல் ஸெப்டெம்பர் 28உ வரையில் ஜெனரல் ப்ரெஞ்சு எழுதிய ரிபோர்ட்டின் சுருக்கம். மற்றோரிடத்தில் தொடர்ந்து சொல்லப்பட்டிருக்கிறது.]

ஆகஸ்டுமீ. 29உ பிரிடிஷ்படை ஸெய்ன்ட்குவென்டினிலிருந்து காம்பீன் (Compeigne & Soissons) ஸாய்ஸன்ஸ ுக்குப் பின்வாங்கியது. அமீன்ஸ் (Amiens) காலிசெய்யப்பட்டது.

ஸெப்டம்பர்மீ. 2உ மார்ன் (Marne) நதிக்கரைக்குத் தெற்கே பின்வாங்கி ஸீன் (Seine) நதிக்குப் பின் சென்றது.

„ 5உ கூட்டாளிகள் எதிரி சைனியத்தை எதிர்க்கத் தீர்மானித்தது.

„ 6உ ஜெர்மன் சைனியங்கள் எதிர்க்கப்பட்டது. (Menonville to Verdun) மினன்வில் முதல் வெர்டன் வரையில் பாவி நின்ற சைனியங்கள் பெரிய சண்டை தொடுத்தது. ஜெர்மானியர் பின்வாங்க ஆரம்பித்தது.

„ 10உ சாயங்கிரம் மேற்படி சண்டை முடிந்தது. ஜெர்மானியர் (Soissons-Rheims) ஸாய்ஸன்-ரெய்ம்ஸ் நோக்கித் துரத்தியடிக்கப்பட்டது.

„ 13உ காலையில் பிரிடிஷ் சைனியம் 'ஏன்' (Aisne) நதியைத் தாண்டிச் செல்ல ஆரம்பித்தது, எதிரி பின்வாங்கி நின்றெதிர்க்கத் தலைப்பட்டது. காம்பீன் (Compiegne along the Valley of the Aisne to beyond Rheims) முதல் ஏன் நதிதீரத்தில் ரெய்ம்ஸ்க்கு அப்பால் வரையில் தொடர்ந்து நின்று சண்டைதொடுத்தது.

„ 19உ (New plan of attack to envelop the German right) ஜெர்மானியரை வலப்புறத்தில் தாக்க புது ஏற்பாடு செய்தது.

„ 23உ இடப்புறத்தில் எதிரி தாக்கப்பெற்றுப் பின்வாங்கியது.

„ 28உ எதிரி தொடர்ந்து சண்டைசெய்து ஜெயிக்கப்பார்த்து முடியாமற்போனது. பெரிய பீரங்கிகளின்றி சண்டைபோட்டு ஜயிப்பது சாத்தியமாயில்லையென்று பீரங்கிகள் வரவழைத்து சண்டை நடந்து வருகிறது.